உ
சிவமயம்.

குமாரபாரதியாரியற்றிய

# திருத்தொண்டர்மாலை மூலமும் பின்கிடைத்த உரையும்.

இவை

நேமத்தான்பட்டி
உமாபதி சிவாசாரிய சுவாமிகள் வித்தியாசாலைக்கதிபர்
ஸ்ரீமான் மெ. மு. பழ.
பழநியப்பசெட்டியார் அவர்கள்
விருப்பத்தின்படி

மதுரை
விவேகபாநு அச்சியந்திர சாலையில்
பதிப்பிக்கப்பெற்றன.
பரிதாபி௵ தை௴

இதன் விலை அணா 3.

# முகவுரை.



கருணாசாகரராகிய பரமேசுரன் சகல ஜீவர்களையுமுய்வித்தற்பொருட்டு வேதங்களை வெளிப்படுத்தினர், அவ்வேத வாக்கியத்தினை யநுசரித்து நடக்கும் ஜீவர்கள் மாத்திரமே தர்மார்த்த காம மோக்ஷ மென்னும் நாற்பயனையு மடைதற்குரியராவர். ஆனல், அவ் வேதங்கள் சமஸ்கிருத பாஷையிலிருத்தலாலும், ஆறங்க முதலிய கருவி நூல்களிற்றேர்ந்தோரல்லாத வனையோராலுணர்தற்கரியனவாயிருத்தலாலும், அவற்றை யாவரும் எளிதிலுணர்ந்தொழுகுமாறு திருவள்ளுவ நாயனார் அவைகளின் சாரங்களனைத்தையுந் திரட்டிக் குறட்பாவடிவாகத் தமிழ்வேதத்தினை யியற்றியருளினர். அவ்வேதத்தினுண்மை யொழுக்கங்களைக் கல்வியறிவில்லாதவர்களும் எளிதினுணர்ந்துய்யுமாறு அறுபத்துமூன்று நாயன்மார்கள் மெய்ஞ்ஞானத்தினுற் சிவானுபூதிச்செல்வம் பெற்ற ஜீவன் முக்தர்களாயிருந்தும் உலகத்தினருக்காக நடாத்திக்காட்டி அவ்வேதத்திற் கூறப்பட்ட இலக்கணங்களியாவு மமையப்பெற்ற இலக்கிய வடிவமாயிருந்தனர்.

பக்தி சிரத்தையோடு வேதப்பொருளை யறிந்து அதனைத் தழுவியொழுகுபவர் பெரியோராவரென்னு முறைப்படி பெரிய புராணத்துட் கூறிய திருத்தொண்டர்களுள் இன்ன நாயனர் இன்ன வொழுக்கத்தினைக் கைப்பற்றி ஜீவன்முக்தராய்ப் பெரியோராயினர்; யாமும் அவவாறொழுகின் ஆவேமென்று எல்லோருக்கும் ஊக்கமுண்டாகுமாறு ஸ்ரீ குமாரபாரதி யென்பவர் தமிழ் வேதத்துட் கூறப்பட்ட ஒழுக்கங்கள் திருத்தொண்டர் சரித்திரத் தமைந் துள்ளனவென்று காட்டும்பொருட்டு ஒரு நூலியற்றி அதற்குத் திருத்தொண்டர் மாலையெனப் பெயரிட்டு வெளியிட்டனர்.

அங்ஙனமாயின், திருத்தொண்டர் சரித்திரங்களில் வேதத்தில் விலக்கப்பட்ட செயல்களுஞ்சிற்சில காணப்படுகின்றனவே, அவையுளவாக, அவரைப்பெரியோரெனல் எங்ஙனமெனின், கூறுதும்:—ஜடபரதர் முதலியோரைப்போல ஜன்மாந்தரங்களிற் செய்த

ஞானப்பியாச முதிர்ச்சியாற் பிறக்கும்பொழுதே ஞானத்தோடவத ரிக்குஞ் சாம்சித்தர்களாகிய பெரியோர்களுக்குத் தற்போதமின்மை யால், அவர்கள் கரணமெல்லாஞ் சிவகரணமாதலின், அன்பின் பெருக் கால் ஒரோவழி எல்லை கடந்து அவர்கள் செய்வன யாவும் சிவச் செயலேயாம். அவையும் அவர்களுடைய பக்தியின் மேம்பாட்டினைச் சூசிப்பனவாகுமேயன்றி இழிவைத் தருவனவாகா. ஆனால், நீர் பெருக்கால் கரையினை யுடைத்து வேறு வழியிற் செல்லுமாயின், உலகினர் அதனை மடையாகக்கொள்ளாது அடைத்துவிடுவர்.

அதுபோல அன்பின்பெருக்காற்றொண்டர்களிடத்து நிகழ்ந்த விதிகடந்த செயல்களை அறிஞர்கள் ஒழுக்கமெனக்கண்டு பயிலாது விடுவர். ஒருகால் ஒருவர் அன்பின் மிகுதியால் அவ்விதச்செய லெம்மிடத்து நிகழுமென்பாராயின், அச்செயலுக்கீசனுகந்து திருத் தொண்டர்கட்கு வெளிப்பட்டதுபோல இவர்கட்கும் வெளிப்படல் வேண்டும். அன்றியும், ஞானத்தால் அபிமானமொழிந்தவர் செய்த காரியங்களை அபிமான நீங்காதார் செய்தல் அரிதினுமரிதாம்.

ஆதலால், முக்தி விருப்பமுடைய ஒவ்வொருவரும் இத்திருத் தொண்டர்மாலையென்னும் நூலைச்செவ்வையாகப்படித்து, அதனுட் கூறப்பட்டுள்ள உண்மை நாயன்மாருடைய ஒழுக்கங்களைக்கைக் கொண்டொழுகுதல் இன்றியமையாமையேயாம். ஒழுக்கம் பயிலா தார்க்கு இறைவனிடத்து அன்பு செல்லாதாம். அது செல்லாத போது அவனருளெய்துதலின்றாம், அஃதின்றேல் முக்தியுமின்றாம்; "ஈசுவரானுக்கிரகத்தினாலேயே புருடர்களுக்கு அத்வைத வாசனை யுண்டாம்" என்னும். அவதூத கீதாவசனமுண்மையான் இத் திருத்தொண்டர்மாலையுட் கூறப்பட்டுள்ள உண்மை நாயன்மார்களு டைய ஒழுக்கங்களும், இந்நூலும் இவ்வுலகிற் பரவி என்று நிலையு மாறு எல்லாம் வல்ல விறைவன் அருள்புரிவாராக.

---

அ. முத்துசாமி பிள்ளை.

# பாயிரம்.



## நூலாசிரியர் செய்தவை.

தூண்டா விளக்கருள்செய் தொண்டத் தொகையினம்பி
யாண்டாரந் தாதிமுறை யன்பாஞேர்க்—கீண்டியன்ற
வள்ளுவர்நூல் வெண்பா வகுத்துரைப்ப ஞரையூர்ப்
பிள்ளையா ரைத்தொழுது பின். (க)

தூய திருத் தொண்டத் தொகைதந்த சுந்தரர்தா
மாயிருஞா லத்தோரை வாழ்வித்தா—ராயதெவன்
கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்ஞற்றுங் கொல்லோ வுலகு. (உ)

மைவைத்த கண்டர் மறைவாக்கி ஞற்புகழ்ந்த
சைவத் தலைவரன்பு சாற்றுவல்யான்—கைவைத்
தரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். (௩)

## உரையாசிரியர் செய்தவை.

முத்திபெற்ரோர் மேன்மை முழுதுரைக்கு மிந்நூற்குச்
சத்தியள வாயருத்தஞ் சாற்றவே—அத்திமுகன்
றன்னருளும் ஆறுமுகன் றன்னருளு முன்னிற்கும்
என்னறிவோ யாது மிலை. (ச)

தொண்டர்கள் பெருமை முற்றுஞ் சொற்றிடச் சுருதி யோர்ந்த
பண்டிதர் தமக்கு மேலாப் பண்புடைத் தெனினுஞ் சேய்போல்
விண்டன னசை மீறில் வெட்கமுந் தோன்ற தென்றே
மண்டலந் தனில்வ ழங்கும் வார்த்தையும் பொய்க்கா தம்மா. (ரு)

பாயிரம் முற்றிற்று.

---

சிவமயம்.

## ஸ்ரீசுந்தரமூர்த்தி நாயனார் அருளிச்செய்த

# திருத்தொண்டத்தொகை.

---

பண் கொல்லிக்கவ்வாணம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
றிருநீல கண்டத்துக் குயவனார்க் கடியே
னில்லையே யென்னாத வியற்பகைக்கு மடியே
னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியே
னல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (க)

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தற் கடியே
னேனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ள லானக்கஞ் சாற
னெஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியே
னலைமலிந்த புனன்மங்கை யானாயற் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (உ)

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
றிருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதையை மழுவினா லெறிந்த
வம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௩)

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கு மடியே
னொருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியே
னொலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியே
னருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௪)

வம்பறா வரிவண்டு மணநாற மலரு
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
வெம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியே
னேயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியே
னம்பிரான் றிருமூல னடியார்க்கு மடியே
னாட்டமிகு தண்டிக்கு மூர்க்கற்கு மடியே
னம்பரான் சோமாசி மாறனுக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௫)

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியே
னார்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௬)

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியே
னையடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௭)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியே
னிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
றுறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியே
னறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (அ)

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியே
னடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௯)

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
றிருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியே
னப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௰)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன்
றென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
றிருநீல கண்டத்துப் பாணனார்க் கடியே
னென்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோ
னன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பா
ராரூரி லம்மானுக் கன்பரா வாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.



# நூல்.

—:0:—

## தில்லைவாழந்தணர்.

பூவா யிரம்பேர் புகழ்கூத் தரைத்தில்லை
மூவா யிரம்பேர் முதலெனக்கொண்—டோவார்
அகர முதல் வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(இதன் பொருள்) சிவஸ்தலங்களெல்லாவற்றுள்ளுஞ் சிறந்ததாகிய சிதம்பர ஸ்தலத்தின் கணுள்ள கனகசபையிலே ஆநந்தத் தாண்டவஞ் செய்தருளுஞ் சபாநாதருக்கு அருச்சனை செய்கின்றவர்களும், இருக்கு, எசுர், சாமம், அதர்வண மென்னும் நான்கு வேதங்களையும் அத்தியயனஞ் செய்தவர்களும், சந்தஸ், கற்பம், வியாகரணம், சிக்ஷை, சோதிடம், நிருத்த மென்கின்ற வேதாங்கங்கள் ஆறையுங் கற்றவர்களும், ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்னும் மூன்றக்கினிகளையும் வளர்த்துக் கிருகஸ்தாச்சிரமத்தில் வழுவாதொழுகுகின்றவர்களு மாகிய தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் பூமியின்கண் ணுள்ளார் சகஸ்திர நாமங்களைக் கொண்டு புகழும் ஸ்ரீ ஆநந்த நடராஜ மூர்த்தியைத் தம்முள் முதன்மையாகவெண்ணிச் சதாகாலமும் வழிபட்டுய்ந்தன ரென்னும் அநுபவத்திற்கியைய எழுத்துக்களெல்லாம் அகர அக்ஷரத்தை முதலாக வுடையவாயின போல உலகங்களும் ஆதி கடவுளை முதலாக வுடையவெனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாருங் கூறியிருக்கின்றா ராதலின், கடவுள் முதல்வரும் பரிபூரணரும் என் றறிக.

## திருநீலகண்ட நாயனர்.

ஆலகண்ட ராணைகொண்டில் லாளெதிர்செல் லாதுதிரு
நீலகண்ட ரைம்பொறிமா னீக்கினார்—மேலாம்
உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(இ-ள்.) தன் நாயகனிடத்திற் சில சந்தேகத்தால் திருநீலகண்டம் எம்மைத் தீண்டாதேயு மென்று மனைவியாருரைத்த திருவாணை கடவாது பஞ்சப்புலன்களென்னு மிருகத்தைப் பஞ்ச விடய சமஷ்டி ரூபமான ஸ்திரீசையோகத்திற் செல்லவொட்டா தடக்கிச் சிதம்பரத்தின்கண் வாழ்ந்திருந்து சிவனருளா லூடல் தீர்ந்து மனைவியாருடன் சிவலோகமடைந்த திருநீல

கண்ட நாயனாரது சித்தவிராகத்துக்கேற்ப, அறிவென்னும் அங்குசத்தினால் ஐந்து புலன்களையும் விடயத்திற் செல்லாதடக்குவோன், மோட்சநிலத்திற் கோர் வித்தாவனென்று நாயனாருந் திருவாய் மலர்ந்துள்ளா ராதலின், ஐம்புலனடக்கம் அடியார்க் கவசியம் வேண்டுமென்ப தறிக. (உ)

## இயற்பகை நாயனார்.

மயற்பகையு ளாளுவப்ப மாதவர்க்கில் லாளை
யியற்பகையி கழ்ந்தெள்ளா தீந்தான்—செயற்பா
லிகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளா ளுவப்ப துடைத்து.

(இ-ள்.) மகாதவசிபோலப் பிராமண வடிவம்பூண்டு வந்த பேருளாளருக்கு அவரது நிராசையே வடிவமான உள்ளங்களிப்புற அவர் விரும்பிய வண்ணம் தமது பத்தினியாரை எவ்வளவுந் தாமதமின்றி இதய மகிழ்ச்சியுட னீந்து எதிர்த்து வந்த பந்துக்களையும் வாளுக்கிரையாக்கி ஈசனுடன் சென் றின்பவீடெய்திய இயற்பகை நாயனாரது சொல்லற்கரிய சுவானுபவத்துக் கேற்ப,யாசகரை அவமதித்து இழிவு சொல்லாது கொடுப்பவரைக்கண்டால் இரப்பவர் மனம் மகிழ்ச்சியடையுமென்று திருவள்ளுவருங் கூறியுள்ளாராதலின், மனங் கோணாமற் கொடுப்பதே கொடையென் றறிக.

## இளையான்குடி மாற நாயனார்.

உய்வித் தவனடியார்க் கோரிருளிற் போய்மாறன்
செய்வித்தும் வாரியனஞ் செய்தானே—மெய்வருந்தி
வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.

(இ-ள்.) உயிர்க்குயிரா யிருந்து உலகை யிரட்சிக்கும், ஒப்பற்ற பரமசிவமே அடியார் வேடம் பூண்டு ஓர்நாள் அர்த்த ராத்திரியில் அன்று பகல் முழுவதும் அன்னபானாதி செய்யாதவர்போல், தளர்ந்து நித்திரை செய்யும் இளையான்குடி மாற நாயனாரை யெழுப்ப,அவரெழுந்து ஆதரவா யுபசரித்து அமுதூட்டும் அவாவினரா யன்று தம் வயலில் விதைத்திருந்த விரையை வாரிவந்தும் தோட்டத்தின் பசிய பயிர்களைக் கொய்து வந்தும்கொடுக்க, மனைவியார் மகிழ்ந்து பாகஞ் செய்து பக்தரை அழைக்க, அவர் ஜோதி வடிவமாய்த் தோன்றி அவ்விருவரையும் தமது பதத்திற் சேர்த்தனரென்னும் அனுபவப்படியே, விருந்தினரை உபசரித் தூட்டி மீதியைத் தானுண்ணுவோனது விளைநிலத்துக்கு விதை போடவேண்டிய தாவசிய மென்த்

திருவள்ளுவ நாயனாருங் கூறியுள்ளா ராதலின், இல்லற தருமத்திற் செவ்வகையானும் விருந்தோம்பல் கடமை யென்றறிக. (௭)

## மெய்ப்பொருள் நாயனார்.

பொய்ப்பொருண்மாற் றூன்புரிந்த பொய்த்தவவே டம்பொருளாய்
மெய்ப்பொருளார் கண்ட விதந்தானே—மெய்ப்பொரு
ளெப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ-ள்.) மித்தையாகிய உலக வாழ்வையே விரும்பிய சத்துருவாகிய முத்திநாத னென்பவன் தபோதனர் போல வேடம் பூண்டு வந்து தன்னை வணங்கிய மெய்ப்பொருள் நாயனாரை, தன்கையில் மறைத்து வைத்திருந்த வாளினாற் குத்திய போதும் சிவவேடமே மெய்ப்பொருளென அவனை வணங்கி, அவனுக்கோரிடையூறும் நேரிடாமற் புறம்போக விடுத்த சமாசாரந் தெரிந்து சிவபதமடைந்த சேதிராட்டரசராகிய மெய்ப்பொருள் நாயனாரது மேலான அநுபவத்திற் கிசைய எந்தப்பொரு ளெவ்வகை யுருவ நாமத்தை யுடையதேனும், அவைகளை நீக்கி உண்மையை யுணர்வதே மெய்யுணர்வென முதற்பாவலரும் மொழிந்துள்ளா ராதலின், திருக்குறிக்கிய விவேகஞ் சிறந்ததென்றறிக. (௮)

## விறன் மிண்ட நாயனார்.

அறன்மண்டு சுந்தரனை யாரூ ரானை
விறன்மிண்டர் தாமே வெகுண்டார்—மறமன்
றுறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும்.

(இ-ள்.) அடியார்களை முதலில் வணங்காது ஆரூர் ஆலயத்துட் சென்ற வன்றொண்டனும் அடியார்களுக்குப் புறகு, அவனைவலிய ஆட்கொண்ட பரமசிவனும் புறகு என்ற விறன்மிண்டநாயனார் கோபக்குறிப்பறிந்த சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடினவுடன் மகிழ்ச்சி யடைந்து அவரைப்புகழவும், மகாதேவரும் அவருடைய சங்கம பத்தியைக் கண்டு தமது கணங்களுக்குத் தலைவராக்கினா ரென்னுஞ் சரிதத்திற் கியைய, புறத்தே கடுஞ்சொற் சொல்லினும் அகத்தன்புடையார் சொல்லின் பிரயோசனம் அதிசீக்கிரம் அறியப்படு மென்று தமிழ்மறை சாற்றுகின்ற தாதலின், புறத்தே வெறுப்பக் கூறினும், அகக்குறிப்பறிந்து கொள்ள வேண்டிய அவசியமென அறிக. (௯)

## அமர்நீதி நாயனார்.

நிரம்புபொருள் சேயொடமர் நீதிமனை யாளோ
டரன்கோ வணத்தட் டதனே—ரிருந்தார்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

(இ-ள்.) அடியார்களது பெருமையை அகிலத்துக்கறிவித்து ஐக்கியஞ் செய்யும் நிமித்தம், திருநல்லூரின் கண்ணே சிவனடியார்க் கமுதூட்டி ஆடையாதி கொடுத்தலாகிய அரும் பணியை வழுவாது கடைப்பிடித்து வரும் அமர்நீதி நாயனாரிடம் பரமசிவம் ஓர் கோவணத்தைக் கொடுத்து, மறைத்து அதற்கீடாக அவரையும் அவருடைய மனைவி மக்கள் முதலிய செல்வத்தையுஞ் சீர்தூக்கித் திருவடி சேர்த்த திவ்விய சரிதத்திற்கேற்பத் தானுஞ் சமனினின்று தன்னிடத்து வைக்கப் பட்ட பொருளையுஞ் சீர் தூக்கிக் காட்டுங்கோல் போல, பட்சபாதமின்றி யொழுகுதல் சற்சனருக் கழகென்பதாய் நாயனாருங் கூறியிருக்கின்றா ராதலின், சார்பின்வழிச் செல்லாது சன்மார்க்க நெறிதவறா தொழுகுதலே சால்புடைத்தென் றறிக. (எ)

## சுந்தர மூர்த்தி நாயனார்.

அளந்தருள்செம் பொன்மணிமுத் தாற்றிலிட் டாரூர்க்
குளந்தனிலே கண்டெடுத்துக் கொண்டா—ருளைந்து
பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

(இ-ள்.) தோழமையாகிய சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்குத் தொண்டினருமை நோக்கி, திருமுதுகுன்றர் அருளிய பன்னீராயிரம் பொன்னைத் திருவருளாக்ஞைப்படி மணிமுத்தாநதியிற் போட்டு விட்டுத் திருவாரூர்க் கமலாலயத்தில் வந்தெடுத்துக் கொண்டா ரென்னுஞ் சரிதத்திற் கேற்ப, ஒருவர்க்கு ஊழ்வினையின்படி வரத்தகாதவை வருந்தினும் வராவாம், வந்தவை வாரியெறியினும் போகாவா மென்று பொய்யா மொழியிற் கூறியிருக் கின்றதாதலின், இல்லாது வேண்டினும் வந்திசையா, உள்ளது தள்ளினு மூட்டு மென்றறிக. (அ)

## எறிபத்த நாயனார்.

பத்தர்பூ மூளி பறித்தகரி பாகரைக்கொன்
றித்தலமேவந் தஞ்ச வெறிபத்தர்—கைத்தார்
குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

(இ-ள்.) சிவபெருமானுக்குச் சாத்தும் பொருட்டுச் சிவகாமியாண்டா ரென்னுஞ் சிவனடியார் திருக் கரத்திற் பற்றியேகுந் திருப்பூங்கூடையைப் பிடுங்கிச் சிதறிய சிறந்த மதயானையை அதன் பாகருடன் அத்தேசத்துக் கிறைவனாகிய புகழ்ச்சோழனும் அஞ்சும்படி கொன்று, சிவாக்ஞையா லிறந்தோ ரனைவரையு மெழுப்பி ஈசனடி பெற்ற எறிபத்தநாயனாரது இணையற்ற சரிதத்துக்கியைய,அறிவும்ஆசாரமுமுடைய அறிஞர்அகத்திலெழுங் கோபாக்கினியை அரை நிமிஷ மேனுந் தாங்க முடியா தெனத் தமிழ் வேதஞ் சாற்றியுள்ள தாதலின், பெரியோர் கோபத்தைத் தடுத்த லரிதென் றறிக. (க)

## ஏனாதி நாத நாயனார்.

தானாக வெல்லாதான் தன்னுதல்வி பூதியைக்கண்
டேனாதி நாத ரிகலிழந்தார்—ஆனாத
சால்பிற்குக் கட்டளை யாமதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

(இ-ள்.) தன்னுடைய சைநியத்துடன் வந்து சண்டை செய்து தோற்றோடிய தாயாதியான அதிசூரன் தந்திரமாய் நெற்றியில் விபூதி தரித்து மறைத்து வர, சமீபித்தவுடன் கண்டஞ்சி, அவனுக் காற்றாதவர் போல அபிநயித்து நிற்க, பாதகனாகிய அதிசூரன் கொன்றவுடனே பரமசிவம் தோன்றித் திருவடி சேர்த்த ஒப்பற்ற ஏனாதிநாத நாயனார் சரிதத்திற் கேற்ப, சால்பாகிய பொன்னினளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின், அது தம்மி னுயர்ந்தார்மாட்டுக்கொள்ளுந் தோல்வியை இழிந்தார் மாட்டுங் கொள்ளுக என திருவள்ளுவ நாயனாருங் கூறியுள்ளாராதலின், தாழ்ந்தவர்க்குத் தாழ்தலே சாதுக்களின் ஆசார மென்றறிக. (கo)

## கண்ணப்ப நாயனார்.

புண்ணப்பர் கண்ணிலென்று புன்கணுறப் பீர்ந்தப்பிக்
கண்ணப்ப ரன்புறப்பிற் கைசெய்தார்—வண்ணப்
புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

(இ-ள்.) போத்தப்பி நாட்டில் உடுப்பூரி லவதரித்த வேடராஜ புத்திரராகிய திண்ண னென்பவரின் சிவபத்தி மேலீட்டைச் சிவகோசரியார் முன்னிலையிற் செகத்தோர்க் கறிவித்தற் பொருட்டுச் சிவபெருமான் திருநேத்திரத்தி லிரத்தஞ் சொரியக் கண்டு அஞ்சினவராய்த் தனதொரு கண்ணைப் பிடுங்கிவைக்க,மறுகண்ணும் அவ்வண்ணமாகக் கண்டுதனது மற்றோர் கண்ணையும் பறித்துவைக்கத் துணிந்த அளவிற் கண்ணப்பா! நில்லெனக்

காளத்தீஸ்வரரது கரத்தாற் றீண்டப் பெற்றுக் கதியடைந்த கண்ணப்ப நாயனாரது கரை கடந்த அன்பிற்கிலக்கியமாக, அகத்தில் விசுவாசமின்றிப் புறக்கருவிகள் வருந்த நடிப்பதாற் பிரயோசனம்யாதுளது? தென்றுதிருவள்ளுவ நாயனாரும் கூறியிருக்கின்றாராதலின், உள்ளன்புடன் செய்வதே உறுதியான பத்தி யென்றறிக. (கக)

## குங்கிலியக் கலைய நாயனார்.

தலையன்பி னால்வளைந்தார் தம்மைநிமிர்த் திட்டான்
கலையன்பின் காணிடுக்கண் காணான்—மலையின்
மடுத்தவா யெல்லாம் பகடன்னு னூற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

(இ-ள்.) சோழ நாட்டின்கண் ணுள்ள திருப்பனந்தா ளென்னும் க்ஷேத்திரத்தில் ஓர் திருவிளையாட்டினிமித்தம் சாய்ந்திருந்த சிவலிங்கப் பெருமானைச் சரிப்படுத்த மதயானையாதி சைநியங்களுடன் வருத்தப்பட்டிழுத்துச் சோர்ந்து கிடந்த மன்னவன் வருத்தம் நீங்கும் பொருட்டு, தன் கழுத்திற் கயிறு பூட்டி உள்ளன்பினாலிழுத்து நிமிர்த்தவுடன் மனைவியார் தந்த மங்கிலியத்தையும் விற்றுக் குங்கிலியம் வாங்கிப் பணிவிடை செய்து குறைவற்ற செல்வமும் பெற்றுத் துக்க ஏதுவான பிறவித்துன்பமும் தீர்த்த குங்கிலியக் கலைய நாயனாரது கூறுதற்கரிய சுவாநுபவத்துக் கேற்ப, துணிவுடன் ஓர் தொழிலில் முயலுவோர், மெய்வருத்தம் நோக்காதிருக்கின் அவர்க்குண்டாகுந் துன்பம் துன்படையு மன்றி, அவர் சுகிப்பரெனத் திருவள்ளுவ நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், துணிவுடையார்க்குத் துன்பமும் இன்பம்போல் தோற்று மென்றறிக. (கஉ)

## மானக்கஞ்சாற நாயனார்.

பஞ்சவடிக் கென்றுசிவ பக்தர்க் குவப்பமண
வஞ்சுவைதமென் கூந்தலரிந் தன்றீந்தார்—கஞ்சாற
ரீத்துவக்கு மின்ப மறியார்கொ றுமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(இ-ள்.) தவப்பயனாற் கிடைத்து மணக் கோலங் கொண்டிருந்த தனதருமைப் புத்திரியின் கூந்தலை மாவிரதி சமய வேடம் பூண்டு வந்த வித்தகர் பஞ்சவடிக்காமென வினவிய வண்ணம் விரைவிலரிந்து கொடுத்து, மேலான பேற்றை யடைந்த மானக்கஞ்சாற நாயனாரது வள்ளற்றன்மைக் கேற்ப, கொடையினால் வருங் குண மின்னதெனத் தெரியாத கொடிய லோபிகள் தாமடைந்த செல்வத்தைச் சத்விஷயங்களிற்

செலவிடாது வைத்து உயிரிழக்கின்றனரெனத் தெய்வப் புலவரும் வியந்து கூறியுள்ளாராதலின், ஈயாத லோபிகள் ஏங்கிச் சாவார்களென்றறிக. (கங)

## அரிவாட்டாய நாயனார்.

போயகமர் மாவடுவும் புண்ணியர்வா யிற்கொளவே
தாயர்களத் தூறுவடுத் தான்கொண்டார்—வீயாரோ
சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.

(இ-ள்.) சிவபெருமானுக்குத் தினந்தோறும் செந்நெல்லரிசியும் செங்கீரையும் மாவடுவும் வழக்கம் மாறாதுவருத்த நிலையினுங் கொண்டு செல்லுழி, ஓர் நாள் களைப்பால் தமோறி அவை கமரிற் கொட்டுண்டு போனதைக் கண்டு துக்கித்துச் சிவாபராதம் நேர்ந்தமையின் அரிவாளால் தமது ஊட்டியை அறுக்கத் துணிந்தவரை "விடேல் விடேலென்ற" தொனியுடன் பரமசிவம் தோன்றித் தமது கரத்தைப் பற்றும் பாக்கியத்தைப் பெற்றுப் பரலோக பதமடைந்த பரம பத்தரான அரிவாட்டாய நாயனாரது திவ்விய சரிதைக்கியைய தன்னாற் கொடுக்கக் கூடிய பொருளைக் கொடுக்கத் தடை நேரிடுமாயின் சரீரத்தை விடுவதே இனிதென்று பொய்யாமொழியிற் புகன்றுள்ளாராதலின், உள்ளதைக் கொடாதவர் வாழ்க்கை சிறப்பன்றென்றறிக. (கச)

## ஆனாய நாயனார்.

ஆனாயர் வேயிசையி லஞ்செழுத்தே யஞ்செவிச்செந்
தேனா யரனுக்கந் திக்களித்தார்—கானிற்
பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

(இ-ள்) அழகிய புல்லாங் குழலிற் பஞ்சாட்சரத்தை யமைத்து வாசிக்குஞ் செவிக் கமுதம்போன்ற கீதத்தைக் கேட்ட சர அசரவுயிர்கள் அனைத்தும் தத்தம் வசமிழந்து உருகி நின்றதுடன் அகிலலோகத்துக்கும் அம்மையும் அப்பனுமாகிய பரமசிவனனவர், பார்வதியாருடன் தோன்றி தம்மை அவ்வுடம்புடனே அழைத்துச்செல்ல,ஆனந்தப் பேற்றை அடைந்த ஆனாய நாயனாரது அற்புத சரிதத்திற்கியைய, சாதன முடன் கால முதலிய நன்கறிந்து வினை செய்யக் கடவதென உத்தர வேத வாக்கியமு மிருத்தலின், சாதனங்களுடன் தொழில் செய்தலே சாத்தியங் கை கூடுதற் கேதுவென்றறிக. (கரு)

## சுந்தரமூர்த்தி நாயனார்.

ஆதிபிலா ரூரர்க் கமுதாக்க வேபரவை
வீதியெல்லாம் நெல்லாய் விளைந்ததே—நீதியால்
இல்லதெ னில்லவண் மாண்பானு லுள்ளதென்
இல்லவண் மாணுக் கடை.

(இ-ள்.) ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகளின் போஜனார்த்தம் போதுமான நெல்லனுப்பிக் கொண்டிருந்த குண்டையூர்க் கிழவர் விளைவின்மையால் நெல்லனுப்புவதற்குத் தடை நேரிட்டு விசனத்துடன் நித்திரை செய்கையிற் பரமசிவாக்ஞையால் வீதி யெல்லாம் நெல்லாய் நிரம்பவே பதிகம் பாடினவளவிற் பூதங்கள் கொணர்ந்து குவித்தனவென்னுஞ் சரிதத்திற்கியைய, இல்லறத்துக்கொத்த மனைவியின்றேல், யாதிருந்து மில்லாததுதான். உண்டேல் ஒன்று மில்லாததாகாதெனத் திருவள்ளுவர் திருவாக்கு மிருத்தலின், தாரத்தி னுற்றுமை சதா இன்பந் தருமென்றறிக. (கசு)

## மூர்த்தி நாயனார்.

சேர்த்திமுழங் கையெலும்புந் தேயச்செஞ் சந்தனமா
மூர்த்தி மதுரேசர் முன்பரைத்தார்—பார்த்தீரோ
அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

(இ-ள்.) தினந்தோறும் திருவாலவாய் எம் அண்ணலுக்குச் செஞ்சந்தனக் காப்புப் பணிவிடை வழுவாது நடாத்தி வந்த அடிகளையும் ஆருகத மதத்தைச் சாரச்செய்யவேண்டு மென்று அபேட்சித்த அப்போதிய சமண அரசனுக்ஞைப்படி, அரைப்பதற்குச் சந்தனக்கட்டை அகப்படாத ஓர் நாள், தமது கையெலும்பு, தேயும் வண்ணம் சந்தனக் கல்லிற் றேய்க்க, தயாநிதியாகிய கடவுள் தடுத்து, சடையே முடியாகக் கொண்டு தமிழ்ப்பாண்டி நாட்டை யாளும்படி செய்து தன்னடி சேர்க்கப்பெற்ற மூர்த்தி நாயனாரது முக்கியமான பத்திக்கியைய, அன்பில்லாதவர்களெல்லாம் தமக்கென்றே ஆதரித்துமாய்வர், அன்புடையாரோ? தமதெலும்பும் பிறர்க்கீவ ரென்று தெய்வப்புலவர் திருவாக்கு மிருத்தலின், அன்புமிகுத்தால் துன்பந்தோன்றாதென் றறிக. (கஎ)

## முருக நாயனார்.

மட்டார்தார் கண்ணி வகைசிவபூ சைக்கொருநாண்
முட்டாது செய்தார் முருகனார்—விட்டாரோ
வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(இ-ள்.) திருப்புகலூரிலே சிவபிரானுக்குத் திவ்வியபரிமள புஷ்பங்களால் திருமாலைப் பணிவிடையும் ஸ்ரீபஞ்சாட்சர செபமுஞ் சிவபூஜையும் வழுவாது செய்து வந்த வைபவத்தால் திருஞானசம்பந்த மூர்த்திகளது சிநேகத்துவமுந் திருமணத்தில் திருவடியுஞ் சேர்ந்த முருக நாயனாரது முயற்சிக் கிலக்கியமாக, ஒருவன் காலத்தை அவத்திற் கழிக்காது தவத்திற் கழிப்பானேல், அஃதவனுக்கு உறு மேற்பவத்தை யொழிக்கும் பரம உபாய மெனநாயனாருங் கூறியுள்ளாராதலின், வாணாளை வீணாளாக்காது தவஞ்செய்வதழகென் றறிக. (கஅ)

## உருத்திர பசுபதி நாயனார்.

உருத்திரமே சொல்லி யுதகத்துள் ளேநின்
றுருத்ர பசுபதியா ருற்றார்—திருத்தாள்
தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(இ-ள்.) சோழமண்டலத்திலே திருத்தலையூரின்கணுள்ள தாமரைத் தடாகத்தில் கழுத்தி னளவாயுள்ள ஜலத்தினின்று அகோராத்திரம் ஸ்ரீ உருத்திர மந்திரத் தியானஞ் செய்து தபோ மகிமையால் சிவனது திருவடிகளை யடைந்த உருத்திர பசுபதி நாயனாருடைய ஒப்பற்ற அநுபவத்திற் கேற்பத், தம்மரபுக்குரிய தபசின் முயலுவோரே தமக்குரிய நன்மையை நாடுபவ ரென்றும், அவஞ்செய்வார் ஆசை வலைக்குட் பட்டுத் தமக்குத் தீமையைத் தேடுபவரென்றும் தெய்வப் புலவர் திருவாய் மலர்ந்திருத்தலின், தவமல்லா முயற்சிக்குச் சஞ்சலமே பலனென் றறிக. (கக)

## திருநாளைப் போவார் நாயனார்.

மூவா யிரமறை யோர் மொய்ப்பத் திருநாளைப்
போவார் சிதம்பரத்துட் போயடைந்தார்—ஓவாப்
பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

(இ-ள்.) ஆதனூரிலே புலையர் குலத்திலே அவதரித்துத் திருப்புன்கூரிற் சிவதரிசனம் பெற்றுத் திருக்குளமொன்று வெட்டி, சிதம்பரத்துக்கு நாளைப்போவே னென்று சதாகாலமு முச்சரித்தலால் அந்த நாமமும் பெற்றுப், பக்திமேலீட்டாற் சிதம்பரத்தையடைந்தும் ஆலயத்துட்

சென்று தெரிசிக்க ஏதுவின்றி அல்லலுற்றிருந்ததற்காக ஆனந்த நடராஜ ராக்ஞைப்படி அக்கினி வளர்க்கத் தில்லை மூவாயிரவருஞ்சூழ அக்கினியை வலம் வந்து அக்கினியினுள்ளே புகுந்த மாத்திரத்தில் அந்தணர் வடிவமாகித் திருக்கோயிலுட் சென்று, திரும்பக் காணப்படாதவராய்ச் சிவனது திருவடியடைந்த ஸ்ரீநந்தனாரது திவ்விய சரிதத்துக் கேற்ப, ஒருவர்க்குயர்வு தாழ்வை யுண்டாக்குவதற்கு அவரவர் ஒழுக்கமே காரணமென்று கூறிய உத்தர வேதவாக்கியமு மிருத்தலின், ஒழுக்கம் விழுப்பந்தருமென்றறிக. (உ0)

## திருக்குறிப்புத் தொண்ட நாயனார்.

தொண்டர் குறிப்பறிந்த தொண்டர் திருக்குறிப்புத்
தொண்டரைத்தங் கந்தைதந்து சோதியராட்—கொண்டார்
குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

(இ-ள்.) ஸ்ரீகாஞ்சிபுர மென்ற ஏகாம்பர புரத்தில் ஏகாலியர் குலத்திலவதரித்து ஈசனடியார்க ளியல்பறிந்து இயன்ற பணிவிடை யியற்றியதுடன் அடியார்களி னுடைமாசுநீக்கிக்கொடுக்கும்அரிய பணியையன்புடன் நடாத்தி வரும் அப்பிரமேய பக்திமே லீட்டை யனைத்துலகுக்கு மறிவிக்க வேண்டி, ஸ்ரீசாம்பசிவ மூர்த்தி ஓர் விருத்த அடியார் வேடங்கொண்டு வர, அவர் தரித்திருந்த அழுக்குடைய கந்தையை வாங்கிச் சொல்லிய வண்ணந் தோய்த்துலர்த்திக் கொடுக்க மழையினாற் றாமதித்தமையா லஞ்சி, அரியபாறையிற்றமது சிரசை மோத, ஆங்கு சிவபிரானது திருக்கரந் தோன்றித் தடுத்துத் தெரிசனங் கொடுத்தலாற் சிவலோக பதமடையப் பெற்ற திருக்குறிப்புத் தொண்ட நாயனாரது திடபக்திக் கேற்ப, குறிக்கும் விதமறிந்து பிறர்குறிப்பை யறியவல்ல சமர்த்தரை யவர் விரும்புவனவற்றைக் கொடுத்தேனுங் கொள்ள வேண்டுமெனக்குறளாசிரியருங் கூறியுள்ளாராதலின், குறிப்பறிந் தொழுகுவாருறவை யுறுப்பினு ளொன்றைக் கொடுத்தேனுங் கொள்ள வேண்டுவதவசிய மென்றறிக. (உக)

## சண்டேசுர நயனார்.

அறஞ்செய்த தாதைதா ளற்றிடத்தண் டீசர்
மறஞ்செய்கொலை புண்ணியமா வாழ்ந்தார்—திறந்தெரியி
னல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

(இ-ள்.) சோழமண்டலத்தின்கண் திருச்சேய்ஞலூரிலவதரித்த விசாரசர்மர் கோக்களின்மேல் வைத்த காருண்ணியத்தால் அவைகளை மேய்த்து வரும் நாளி லோர்நாள் மண்ணியாற்றங்கரையில் மணலாற் சமைத்த மகாலிங்கத்துக் கபிடேகஞ் செய்யும் பொருட்டு, நிறைத்துவைத்திருந்த பாற்குடங்களை மதியாதுதைத்த பிராமணரும் பிதாவுங் குருவுமாகிய எச்சதத்தரது காலை மழுவாற்றுணிக்கவும் மகாதேவர் தோன்றி, யினி நாமேயுன் பிதாவென வெடுத்தணைத்துச்சி மோந்து மகத்தான சண்டேசுர பதமும் அருளிய வண்ண மாநந்தாதிதராயாலயங்கடோறு மின்றும் வாழும் ஸ்ரீ சண்டேசுர நாயனாரது மேலானவநுபவத்திற்கேற்ப, ஆகாத காலத்து நல்லவை செய்யினுந் தீதாய் முடியும், ஆங்காலத்துத் தீது செய்யினுஞ் செறிவது நன்மையே யெனத்திருவள்ளுவருங் கூறியிருக்கின்றா ராதலின், நன்மை யுண்டாங்காற் றீயசெயலு நன்மையைத் தருமென்றறிக (உஉ)

## சுந்தரமூர்த்தி நாயனார்.

ஓராப் பரவைக் குமாபதியைத் தூதாக்கித்
தீராப் புலவியையுந் தீர்த்தாரே—யாரூரர்
உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

(இ-ள்.) திருவொற்றியூரின்கண் ணவதரித்துச் சிவபணிசெய்து கொண்டிருந்த சங்கிலி நாச்சியாரை உமாபதியானவர் தோழராகிய சுந்தரர் ஊனூழட்டிவைக்க வொப்புக்கொண்டா ரென்பதையுணராத பரவையார் கொண்டிருந்த வூடலைச் சிவபெருமானையே தூதனுப்பித் தீர்த்துக்கொண்டாரென்னுந் திவ்விய சரிதத்திற் கேற்ப, உணவை ருசிப்பிக்கவுப்புவேண்டுவதுபோலப் புணர்ச்சியின்பத்திற்குப் புலவிவேண்டியதாயினு மீறாதடக்க வேண்டுமென நாயனாருங் கூறியுள்ளா ராதலின், அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷமென்றறிக. (உங)

## திருநாவுக்கரசு நாயனார்.

தரைசேர் சமணீங்கிச் சைவஞ்சேர் நாவுக்
கரசர் வயிற்றுவலி யற்றார்—உரைசேர்ந்த
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

(இ-ள்.) உலக மெங்கணும் பரவியிருந்த அருக மதத்தை யநுட்டித்து வந்த மருணீக்கியாரை யாட்கொளுங் கருணையினாலே வியாதியை நோய்

அதிகரிக்கவுந் திருவதிகையிற் சிவத்தொண்டு செய்து கொண்டிருந்த அம் மூர்த்திகள தருமைத் தமக்கையார் ஆஞ்ஞைப்படி சைவ சமயஞ் சார்ந்து நேர்ந்த வயிற்று வலியும் நீங்கித் தேவாரம் பாடின போது, திருநாவுக்கரசென்ற திவ்விய நாமமும் பெற்ற மூர்த்திகளது முக்கிய சரித்திரத்திற் கேற்ப, அறிய வேண்டிய பரமாத்தும வஸ்துவை யறிந்து அகப்பற்று, புறப்பற்றுக் களை யறுத்த அறிஞரை யநாதியாய்த் தொடர்ந்து வருகிற துன்பங்களணுகாவென்று செந்நாப்போதாருஞ் செப்பியிருக்கின்றாராதலின், அடியாரானோர்க் கல்லலணுகா தென்றறிக. (௨௪)

நீற்றறைநஞ் சானைகட லேனுற்றா ரப்பருக்கு
மாற்றமணர் பின்னிருந்து வாழ்ந்தாரோ—வாற்றரிய
நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

(இ-ள்.) தங்கள் சமய குரவர் சைவ சமயத்திற் பிரவேசித்த சமாசாரந் தெரிந்த அசத்துக்களாகிய சமணர்கள் அப்ப மூர்த்திகளை யாராலுந் தாங்கற்கரிய நீற்றறையில் வைத்தும் விடத்தை யூட்டியும் மதயானையை யேவியும், கடைசியாய்க் கல்லோடு கட்டிக் கடலிற் றாழ்த்தியும் யாதொரு தீங்கும்நேரிடாது அம்மூர்த்தி நீண்டகாலம் வாழ்ந்திருந்தாரேயன்றி, அத்தீங் கனைத்துஞ் சமணர்கள் சுகத்திற் கேதுவின்றிக் கெடுதிக்கே காரணமாயிற்று. அதுபோலவே, நாயனாரும் பிறவுயிர்க்குத் துன்பஞ் செய்வோர்க்கு அது தமக்கே வருமாதலாற், றமக்குத் துன்பமில்லாமையை விரும்புவோர் பிறவுயிர்க்குத் துன்பஞ் செய்யமுயலாரெனக் கூறியிருக்கின்றாராதலின், செய்த தீவினை செய்தவர்க்கே வருமென்பதை யூகித்துணர்க. (௨௫)

மருணீக்கி யார்தரும சேனருமாய் நாவுக்
கரசரப்ப ராகியின்ப மானார்—அருளால்
இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(இ-ள்.) மருணீக்கியா ரென்ற பிள்ளைத் திருநாமம் பெற்றிருந்தும் ஜைனராற் றருமசேனரென்றும் பரமசிவனால் நாவுக்கரைய ரென்றும் ஞானசம்பந்தரால் அப்பரென்றும் நாமங்களிடப் பெற்றுச் சிவஞானியாய்ப் பேரானந்த மடைந்ததுக் கேற்ப, மெய்யுணர் வுடையோர்க்கு அஞ்ஞானம் நீங்கி யானந்தம் பெருகு மென்பதாக நாயனாருங் கூறியுள்ளாராதலின், ஆசை நிவிர்த்தியே யானந்தப்பேற்றிற்கேதுவென்றறிக. (௨௬)

விண்களிப்பக் காணு வியன்கயிலை வாழ்வையப்பர்
கண்களிப்ப வையாற்றிற் கண்டுவந்தார்—எண்களிப்பக்
கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(இ-ள்.) தேவர்களாலுங் காண வொண்ணாத கைலாசச் சிறப்பை ஸ்ரீ அப்பர் சுவாமிகள் திருவையாற்றிற் பரமசிவாக்ஞையாற் கண்கள் களிகூரத்தெரிசித்துப் பேரானந்த வாரியின் மூழ்கியிருந்தாரென்பதுக் கேற்ப, கற்றோரே கண்ணுடையார் மற்றையர் முகத்திரண்டு புண்ணுடைய ரென நாயனாரும் நவின்றுள்ளாராதலின், கல்வி யழகே யழகென்றறிக. (உஎ)

மாமணிபொன் மாதரெதிர் வந்துறினும் பற்றற்றார்
தாமரன்பால் வந்தரசர் தாழ்த்தாரோ—வாமெனவே
பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

(இ-ள்.) ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்புகலூரின்கண்ணுள்ள சிவாலயத்தில் உழவாரப் பணிவிடைசெய்து கொண்டிருக்கும் பொழுது திருவருளாக்ஞையால் உழவாரத்திற் றட்டுப்பட்ட ரத்தினங்களை வாரி வெளியே யெறிந்தும், எதிரில் நின்ற ரம்பாஸ்திரிகளை யேறிட்டுப் பாராமலு மிருந்த பற்றறுதியுடன் ஐக்கிய சமயஞ் சிம்ம ரூபமாய்த் தோன்றிய சிவபெருமானை வணங்கித் தேகப்பதைப்புமற்றுச் "சிங்கமே நின்னடிக்கே போதுகின்றே" னென்னுந் தேவாரமு மோதித் திருவடிக்கணைக்கியமான அற்புதத்திற்கியைய, ஆசையே பிறவிக்கேது; அதினீக்கமே முத்திக் கேதுவென முதற் பாவலர் மொழிந்துள்ளாராதலின்; அற்றது பற்றெனி லுற்றது வீடென்றறிக. (உஅ)

## குலச்சிறை நாயனார்.

நலச்சிறைநீர் வேணியார் நல்லடியார் யார்க்குங்
குலச்சிறையார் தாம்பணிதல் குன்றா—ரிலர்க்கிகழா
ரெல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(இ-ள்.) கீழைச் சமுத்திரத்தில் மணமேற்குடியின்க ணவதரித்துப் பாண்டியராஜாவின் மந்திரியாரா யிருந்த குலச்சிறை நாயனார் சடாபாரத்திற் கங்கையைத் தரித்த சிவபிரானடியாரியாரையும் பணிந்து அவர் வேண்டுவன வெறுப்பக் கொடுத்து வந்ததோடு குணமில்லாரையு மவமதி

க்காததிகமாயுபசரித்து வந்த அநுபவத்திற் கிலக்கியமாக, எவ்வகை யோர்க்கும் பணிதலே நன்று; அதனிலுஞ் செல்வமுடையா றவ்வாறெழுகிற் பெருமையிற் பெருமை யென நாயனாருங் கூறியுள்ளாராதலின், தம் பெருமை யெண்ணாமையே சற்சனர்க்குத் தகுதி யென்றறிக. (உக)

## பெருமிழலைக் குறும்ப நாயனார்.

நாவலர்கோ மான்கயிலை நாளைப்போ மென்றுமுன்போய்
மேவி மிழலைக்குறும்பர் வீற்றிருந்தார்—யாவருக்கு
மின்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.

(இ-ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளையே யுபாசித்துக் கொண்டிருந்து அஷ்டமாசித்திகளும் வரப்பெற்ற மகா யோகியாகிய பெருமிழலைக் குறும்ப நாயனார் திருநாவலூரர் ஸ்ரீகைலாசத்திற்குப் பரமசிவாக்ஞையால் வந்த வெள்ளானையின் மீது மறுநாளெழுந்தருளுவதை முன்னாளே தம்மியோக பெலத்தாலறிந்து தாம் முன்னாடியே கைலாசத்திற் போயிருந்தாரென்ற அனுபவம் போற் சிநேகிதரில்லாவிடத்தில் வசித்தலே துன்பம்; அவர் பிரிவோ? அதனினுந் துன்பந்தருமென்று நாயனாருங் கூறியுள்ளாராதலின், கூடிப் பிரியேலென்னும் ஔவையார் வாக்கை யறிந்து கொள்க. (உ௦)

## காரைக்கா லம்மையார்.

என்புருவா லம்மையெள்ள வீசர்நமக் கம்மையென்னு
மன்புருவாள் காரைக்கா லம்மைகாண்—முன்பே
யுருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

(இ-ள்.) கணவரைத் தெய்வமென வழிபட்ட மகத்துவத்தினாலே மாங்கனி வரக்கண்ட காதலரே யிவரைத் தெய்வமென வழிபட நேர்ந்தமையாற் காயச் சட்டையை யுதறித் தலையால் நடந்து கைலாசஞ் சென்ற காரைக்காலம்மையார் வருவதைக் கண்ட பார்வதியார் நகைத்திவ்வண்ணம் வருபவர் யாரென? வீசர் நமக்கம்மையே யென்றவுடன் அப்பா வென்று சமீபத்திற் சென்று விரும்பிய வண்ணமின்றுந் திருவாலங்காட்டிற் றிருநடன தெரிசனஞ் செய்து கொண்டிருக்கிற திவ்விய சரிதத்திற் கிலக்கியமாக, இரதத்திற் கச்சாணி போன்ற வல்லவரு முளராதலின், உருவத்தைப் பார்த்திகழ்த லாகாதென நாயனாரு நவின்றுள்ளாராதலின், வெளிவேட மாத்திரம் விசேடமன்றென விசாரித்தறிந்து கொள்க. (உக)

## அப்பூதியடிகணாயனார்.

அரசினையப் பூதி யடிகளறி வாரோ
வுரைசெயுணர் வாலுறுநட் புற்றார்—மருவிப்
புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

(இ-ள்.) சோழமண்டலத்திலே திருவையாற்றுக் கடுத்த கீழ் புற முள்ள திங்களூரின்கண் ணவதரித்த அப்பூதியடிகள் திருநாவுக்கரசுசுவாமி களை நேரே கண்டு தெரிசியாதிருந்தும் அம்மூர்த்திகளின் மகிமையைக் கேட்ட மாத்திரத்தி லன்புமேலிட்டு அப்ப மூர்த்திகளைத் தெரிசிக்கும் பொருட்டு, அளவற்ற தர்மசாலை தண்ணீர்ப் பந்தல் முதலியன செய்தவை களுக்கெல்லாம் நாவுக்கரையர் தர்ம மென்பதாக நாம மிட்டு வாழுநாளில் ஆங்கடைந்த அப்பர் சுவாமிகளின் சரணங்களிற்றாழ்ந்து அரவு தீண்டி யிறந்த அருமைப்பிள்ளையையுமறைத் தமுதூட்டக் கருதிய பேரன்பை யுணர்ந்து பிரேதத்தை யெடுத்து வரும்படி யாக்ஞாபித் தாலயஞ் சென்று பதிகம் பாடப் பிள்ளை விடந் தீர்ந்து சமபந்தியா யடிகளுடனிருந்து போஜனமுஞ் செய்து சில காலத்தின் பின்னர் சிவனடியைச் சேர்ந்த திவ்விய சரிதத்துக்கிலக்கியமாக, வேறுவகைச் சாதனங்களினும் ஒத்த வறி வே யுறவினுரிமையைக் கொடுக்கு மென்றுத்தரவேதத்தினுங் கூறியிருக் கின்றதாதலின், உள்ளுணர் வில்லாருற வொரு நாளும் பயன் படா தென் றறிக. (௬௨)

## திருநீலநக்க நாயனார்.

நலங்கொடிரு நீலநக்கர் நாதர்மே லில்லாள்
சிலம்பிவிழ வாய்மருந்து செய்தாள்—சலங்கொளுமு
னேய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(இ-ள்.) சோழ மண்டலத்திலுள்ள சாத்த மங்கையிலே அயவந்தி யென்னும் ஆலயத்திற் பரமசிவ லிங்கார்ச்சனஞ் செய்து சிவத்தியானத்தி லிருந்த திருநீல நக்க நாயனார் மனைவியார் சிவலிங்கத்தின் மேலொரு சில ந்திப் பூச்சிவிழுந்ததைக் கண்டு திடீரென்று எச்சிலுமிழ்ந்ததை யறிந்த நாயனார் அம்மையாரைக் கோபித்து விட்டு, வீட்டிற்குச் சென்று நித்திரை செய்கையில் எச்சிலுமிழ்ந்த இடந் தவிர மற்றிடமெல்லாங் கொப்பளித் திருப்பதை யடிகளுக்குச் சொப்பனஞ் சாதிக்க, அஞ்சி யெழுந்து மனைவி யாரை யழைத்து வந்து வாழும் வைபவத்தால் ஞானசம்பந்தருமவர் மனைக்குச் செல்லு மாட்சிமை பெற்றதுடன் திருமணத்தைச் சேவித்துச்

சிவபதமடைந்த சிறந்த சரிதத்திற் கேற்ப, வைத்தியன் வியாதியையும், அது வந்த எதுவையும், அது தீருமுபாயமுமாராய்ந்து சிகிச்சை செய்யவேண்டு மென்று நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், வியாதியாதியறிந்து, மருத்துவஞ் செய்தலே விசேட மென்றறிக. (௩௩)

நமிநந்தியடிக ணாயனார்.

நக்கமணர் வெள்கநமி நந்தியா ரூரார்க்கு
மிக்கபுன லாலேவிளக் கெரித்தார்—தக்கமனத்
தெண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

(இ-ள்.) நல்லாரிடத்தும் பொல்லாங்கு கூறு நன்றறியாச் சமணர் கள்நாணும்படி நாதனருளிய வண்ணம் நல்ல தண்ணீர் கொண்டு ஆரூரின் கணுள்ள அறநெறியாலயத்தி லழகிய தீபங்கள் போட்டானந்தித்ததுடன் திருவாரூர் வாசிகளனைவருஞ் சிவகணங்களெனச் சிவாக்ஞையாற் றெளிந்து அதுமுதற் றிருவாரூரிலேயே வசித்துச் சிவபூசையாதி வழுவின்றி யியற்றி, அப்பர் சுவாமிகளாலடியார்க்கு ஆணிப் பொன் னென்றும் பாடப் பெற்று, சிவபதமடைந்த நமிநந்தியடிகணாயனாரநுபவத்திற்கியைய,' தொட்டகாரியத்திற்றுணிவாய் முயலுபவர் இட்டப்படியே யெல்லா மெய்து மென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், துணிந்து பணி செய்வோரே சுகம் பெறுவரென்றறிக. (௩௪)

சுந்தர மூர்த்தி நாயனார்.

ஆறுறு கட்டாரை யாறணையா வாறுபெரு
காறுறு காட்டநடந் தாரூரர்—பேறுணர்
வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

(இ-ள்.) தத்துவக் கூட்ட மென்னு முப்பத்தாறு சத்துருக்கள் தலையெடா வண்ணமடக்கிய தீரர்களான ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், சேரமான் பெருமாணாயனாரிருவருந் திருவையாற்றைத் தெரிசிக்க விரும்பியவண்ணஞ் செல்ல வொட்டாது கரைபுரண்ட காவேரி நீர் விலகும்படி "ஐயாறுடைய வடிகளோ" வென்ற விறுதியுடைய பதிகம் பாடவும் நிமலர் ஓல மென்று கூறி நீரையும் விலகும்படி செய்யச் சுந்தரர் தோழருடன் தெரிசித்துப் பேரானந்த மடைந்த சரித்திரத்திற் கேற்ப, வெள்ளம் போன்றவிசேட துன்பமும் அறிவுடையோர் நினைத்தவளவிலழியு மென நாயனாருங் கூறினாராதலின், அறிவுடையா ரெண்ணின மட்டிற் றுன்பமகலு மென்றறிக. (௩௫)

## திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்.

வால வயதில் வளர்புகலிப் பிள்ளையார்
போல விசையம் புரிந்தவரார்—ஞாலமிசைத்
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(இ-ள்.) சோழமண்டலத்திலே சீர்காழியின்கண் ணவதரித்த திருஞானசம்பந்த மூர்த்திகள் அதிபாலியமான மூன்றுவது வயதில் பார்வதியார் பொற்கிண்ணத்தி லேந்தி யளித்த திருமுலைப் பாலமுத மருந்திச் சிவானந்த மேலிட்டுத் திருவருளை வியந்துபாடிச் சிவக்ஷேத்திரங்கள் தோறுஞ் சென்று தேவாரம்பாடிப் புறமத கண்டனமுஞ் செய்து சிவமதஸ்தாபனஞ் செய்ததுபோற் பூமியின் கண்ணே புகழுடம்பைப் பெற்றவரார்? இல்லை யென்பதற் கிலக்கியமாகப், புகழுடன் வாழத்தக்க புண்ணியமில்லாத ஆன்மாக்கள் பிறத்தலினும் பிறவாமையே நன்றென்பதாக நாயனாருங் கூறி யிருக்கின்றாராதலின், புகழுடையோர் பிறப்பே பிறப்பென்றறிக. (கசு)

பண்ணார் பசுந்தமிழ்ச்சம் பந்தரெதிர் வந்தமணா
ரெண்ணா யிரங்கழுவி லேறினார்—ஒண்ணாது
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

(இ-ள்.) பன்மாலைத்திரளினும் பாமாலை சூட்டலே பரமசிவத்துக்குப் பிரீதி யென்பதை யிவ்வுலகிற் கறிவிக்கும் வண்ணம் இசையோடு கூடிய தேவாரப் பதிகங்களை பாடி, பாண்டிநாட்டையு முய்விக்கவந்த புகலியர்கோன் சக்தி யிவ்வளவென்றறியாத பாதகர்களான சமணர்கள் பாண்டியன் முன் வெற்றிகூறித் தோற்ற விசனமேலீட்டால் வீணா யெண்ணாயிரவருங் குலச்சிறையார் தந்திரமாய், தயார்செய்து வைத்திருந்த கழுவிலேறி மடிந்த விஷயஞ் சகிக்க வொண்ணாததென்னுஞ் சரிதைக் கேற்ப, மகா மன்னர் பகையினு மந்திரிகளின்பகை யாகாதெனத் திருக்குறளிலுங் கூறி இருக்கின்ற தாதலின், எஜமானுறவை யேவலர் கெடுப்பதெளிதென்றறிக. (கஎ)

முத்தமிழ்ஞா னத்தலைவர் முன்னம் பகைசாரப்
புத்தனெதிர் நின்றிடியிற் பொன்றினா—னித்திறமென்
கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.

(இ-ள்,) இயலிசை நாடக மென்னு மூத்தமிழு முணர்ந்தஞான வேந்தர் பாண்டி நாடு நீங்கிப் போதி மங்கைக்குச் சமீபத்தி லெழுந்தருளு கையில், பலவாத்திய கோஷத்துடன் சின்னம் பரசமைய கோளரி வந்தா ரென் றூதுமொழி கேட்ட பாதகர்களான சமண்பசாசுகள் பலகூடிப் பல்லக்கை மரிக்கக்கண்ட பக்தரொருவர் இப்புத்தநந்தி சிரசிலிடி விழ வெனச் சபிக்க, அப்பொழுதே யிடியவன் சிரத்தில் விழுந்திறந்த வற்புத சரிதைக் கிசைய, மூவகை யாற்ற லுடையார்க்கு அவ்வாற்றலில்லார் முன் பட்டுத் துன்பஞ் செய்ய முயல்வது பின்வரக் கூடிய யமனை முன்னமே யழைத்த லொக்குமென முதற் பாவலரு மொழிந் துள்ளாராதலின், தபோ தனர் சாபஞ்சகிக்க முடியாதென் றறிக. (௩அ)

ஏறியவோ டக்கோ லிசைஞானச் செந்தமிழா
லாறுகடந் தார்தோணி யார்மகனார்—வீறடங்கா
வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு.

(இ-ள்.) தோன்றாத் துணையாயிருந் துயிர்களை யிரட்சிக்குந் தோணி யப்ப ரிளையகுமாரர் அவதாரமாகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் திருக் கொள்ளம் பூதூரைத் தெரிசிக்கத் தீவிர விச்சை செனித்த காலத்திற் செல்லவொட்டாது வேகமாய்ப் பெருகிய காவேரி நதியைக் கடக்க அவண் கட்டியிருந்த தோணியை யவிழ்த்து அடியார்கூட்டத்துடனேறி, கொட்ட மேகமழுங் கொள்ளம் பூதூர் என்னும் பதிகமே கோலாய், ஓடஞ்சென்று கரை சேர்ந்தன ரென்னுஞ் சரிதத்துக் கேற்பத், தாமரைத்தண்டு தண்ணீ ரளவாய் நீளுதல் போல மனிதர் மனத்தி னூக்கத்தளவே மாட்சிமையு மென நாயனாருங் கூறி யுள்ளாராதலின், சித்த திடமே சித்தியைத்தரு மென்றறிக. (௩க)

கணவனெனக் காதலியைக் காழியர்கைப் பற்றி
மணவறையி சன்கழலாய் வாழ்ந்தார்—குணமே
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(இ-ள்.) திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் பிதாவாகிய சிவபாத விருதயரும் ஏனையரும் விரும்பிய வண்ணம் விவாகச் சடங்குக் கொப்பி நல்லூர் நம்பியாண்டார் புத்திரியை நற்றினத்தில் மாலை சூட்டிக் கைப் பற்றி யில்லொழுக்கம் வந்து சூழ்ந்தமையா லினி யிங்கு வாழ்தலாகா தென வெண்ணி யக்கினிவலம் வரும்பொருட் டாலயத்திற் சேகவு மங்கு

தோன்றிய சோதியுட்டிருவருட் பிரேரணையா லுண்டான அசரீரிவாக்குப் படி மணக்கோலச் சேவைக்கு வந்த மற்றையருடன் மனைவியாரையு மத னுட் புகவிடுத்துத் தாமு நித்திய மங்களஸ்வரூபியாகிய பரமசிவ பாதார விந்தத்தையடைந் தானந்த முற்றன ரென்னு மற்புத சரிதத்திற் கிலக்கிய மாக, முற்றத் துறந்தவர் முத்தியடைவர் மற்றையர் பிறவி வலையிற் பிணிப் புண்டவராவ ரெனத் திருவள்ளுவ நாயனாருங் கூறியுள்ளாராத லின், சகல பற்றையும் விட்டால் சாயுச்சியமுத்தி தானே சித்திக்கு மென்றறிக. (௨0)

## ஏயர்கோன் கலிக்காம நாயனார்.

கணையாள் வாராம்வந் தென்னையாள் வாரென்று
காசினியில் மாண்டார் கலிக்காமர்—பேசின்
மருந்தோமற் றானோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

(இ-ள்.) சோழநாட்டின்க ணுள்ள திருப்பெருமங்கலத்திற் குருலிங்க சங்கமபத்தியிற் குறைவுபடா தில்லற தருமம் வழுவாது நடாத்தி வந்த ஏயர் கோன்கலிக்காம நாயனார் சுந்தர மூர்த்தி சுவாமிகள் பரமசிவனைப் பரவை யார்பாற் றூதனுப்பிய சமாசாரங் கேள்வியுற்றுப் பதைபதைத்து அவரைப் பார்க்கவே கூடாதென்று நிச்சயித்திருந்த திடவைராக்கியத்தைச் செகத் தோர்க்குத் தெரிவிக்க வேண்டிப், பரமசிவனவர் அவருக்குச் சூலை நோயளித்து அதனைத் தீர்க்கும் பொருட்டு, சுந்தரரை அவரிடஞ் செல் லும்படி யேவ, அச்சமாசாரந் தெரிந்த கலிக்காமர் காயத்தை உடை வாளாற் பீற, மரணமடைந்த சரீரத்தை மறைத்து வைத்து மனைவியார் மறைந்து நின்றதைச் சுந்தர மூர்த்திகள் குறிப்பாலுணர்ந்து தாமு மவ் வணஞ் செய்யத் துணிந்தவுடன் திருவருட் கிருபையாற் கலிக்காம ருயிர் பெற்றெழுந்து சுவாமிகள் கரத்தைப் பிடித்தானந்த பரவசராய்த் தெரிசி த்துச் சில காலத்தின் பின்னர் சிவபத மடைந்ததற் கியைய, மானமழிய வந்த விடத்து மாளாது வாழ்தல் மானத்தைத் தடுக்கு மருந்தோவெனத் திருள்ளுவ நாயனாருங் கூறியுள்ளாராதலின், மானத்தைக் காப்பாற்றுவதே மனுடத்தன்மைக்குச் சிறப்பென்றறிக. (௨க)

## திருமூல நாயனார்.

பரகாயஞ் சேர்ந்தார் பசுக்களா லாய்ச்சி
மருவாமன் மாதவமே வாய்ந்தார்—திருமூல
ருழையு மூப்பக்கங் காண்ப ருலேவின்றித்
தாழா துளுற்று பவர்.

(இ-ள்.) திருநந்திதேவர் மாணாக்கர்களி லொருவராகிய சிவயோகி யொருவர் தெட்சிண கைலாசமாகிய பொதிய மலையின்கண் வசிக்கின்ற ஸ்ரீ அகஸ்தியரைத் தெரிசிக்க வுத்தேசித்து வரும் வழியிற் றிருவாவடு துறைக் கடுத்த சாத்தனூர்ப் பக்கத்திற் பசுக்க ளெல்லாங் கூடி யிறந்து கிடந்த தங்கள் மேய்ப்பனாகிய மூலன் சரீரத்தைச் சுற்றி நின்று கதறு வதைப் பார்த்து மனமிரங்கி மாண்டவுடலிற் றான் பிரவேசித் தெழுந்து பசுக்களை மனங்களிக்கச் செய்ததுடன் மகாதேவராக்ஞையை ஞான திரு ஷ்டியாலறிந்து மனைவி முதலிய பற்றுக்களெல்லா முற்றத் துறந்து திரு வாவடுதுறைக்குச் சென்று மூவாயிர வருடஞ் சமாதியிலிருந்து சரியை கிரியை யோக ஞானச் சாரமான திருமந்திர மென்னும் நூலைச் செய்தரு ளித் திருக்கைலையை யடைந்தன ரென்னு மனுபவத்துக் கேற்ப, விடா முயற்சி யுடையோர் ஊழ்வினையையும் விலக்கிவிட வல்லவராவா ரெனப் பொய்யா மொழியிலும் புகன்றுள்ளாராதலின், பிரயாசைக்குத் தக்க பிரயோசன மடையப்படு மென்றறிக.

### தண்டியடிக ணாயனார்.

அந்தகனென் றேசு மமணரந்த ராயொழியத்
தந்தமொழி சாதித்தார் தண்டியார்—முந்தமொழி
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

(இ-ள்.) சோழ நாட்டிலே திருவாரூரிலே சிவபக்தி துரந்தரராய் ஸ்ரீபஞ்சாட்சர ஜெப நிட்டராய்த் திருவாரூர்த் திருக்குளப் பணி நடாத் திய தண்டியடிகளைக் குருடென்றுஞ் செவிடென்றுந் திட்டித் திருப்பணிக் கிடையூறு செய்த சமணர்களை அடிகள் சபித்த வண்ணம் மறுதினமே யவர்களெல்லாங் கண்ணிழந்து கதிதெரியா தோடவும், விமல னடியாராகிய அவ்வடிகள் விண்ணுலகறிய விழிபெற்று வீடுகூடவுந் திருவருட்கிருபை செய்த ஆச்சரிய சரிதத்துக்கியைய, ஆர்க்குஞ் சொல்லுவ தெளிது. சொல் லியபடியே தொழில்செய்த லரிதெனத் திருவள்ளுவ நாயனாருங் கூறியிருக் கின்றானாதலின், சொல்லியபடி நடத்தல் யார்க்கும் அரிதென்றறிக. (௩௨)

### மூர்க்க நாயனார்.

உருளாய மும்பொன் னுதவுதன்மூர்க் கர்க்கே
பொருளாய மற்றவர்க்கே போக்கு—மருளா
மறத்தினாஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

(இ-ள்.) பஞ்சபாண்டவர்களையும் பரதேசம் போகும்படி செய்த சூதாட்டத்தாற் பொருளீட்டி யடியார்க் கமுதூட்டித் தொண்டை நாட்டிற் றிருவேற்காட்டிற் சிவனடியார்களைச் சிவனென வணங்கிய மூர்க்க நாயனார் அம்முக்கிய சிவபுண்ணியத்தால் முத்தியடைந்தன ரென்னு மூதுரைக்கியையத், தருமஞ் செய்வதற்கு மேற்பட்ட சம்பத்துமில்லை. அதனைத் தவிர்வதற்கு மேற்பட்ட விபத்துமில்லையெனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவருங் கூறியுள்ளாராதலின், தருமந் தலைகாக்கு மென்றறிக. ()

## சோமாசிமாற நாயனார்.

சோமாசி மாறனார் சுந்தரரால் யாகமினி
தாமா றரனை யழைப்பித்தார்—ஆமாம்
போதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

(இ-ள்.) சோழ மண்டலத்திலே திருவம்பரின்கண் சிவபக்தி செய்து கொண்டு வாழ்ந்திருந்த சோமாசிமாற நாயனார்ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளின் கிருபையைப் பெற்றுத் தாமியற்றிய யாகத்திற் பரமசிவமே பிரத்தியட்சமாக ஆவிர்ப்பவித்து அவிப்பாகத்தை யேற்றுக் கொண்டதனு லாநந்தப் பேற்றையடைந்தா ரென்ற சரிதத்திற்கியையச், சுற்றத்தாரிடத்தே சுட்டு நோக்கம்வைக்கு மன்னவன் கிளைஞர் மகிழ்ச்சியுடன்வாழ்வு ரெனத் திருவள்ளுவ நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், பெரியாருறவு பெருமைக் கேது வென்றறிக. (௪௫)

## சுந்தரமூர்த்தி நாயனார்.

பொருட்டுறையுன் பாட்டேநற் பூசையென்றூ ரூரர்க்
கருட்டுறையா ரன்புசெய்தா ரானார்—மருட்டேர்
செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

(இ-ள்.) அடிமையோலை காட்டி யாட்கொளும் வண்ணந் திருவெண்ணெ நல்லூராலயத்துச் சென்றற்புதக்காட்சி யளித்தவுடன் அங்கம் பரவசமா யஞ்சலியஸ்தராய் நின்ற சுந்தரரை நோக்கி நீ நம்மைப் பித்தாவென்று கூறினமையால் அவ்வண்ணமே பாடுக வென்றண்ணலா ரருளிய பிரகாரம் பித்தாபிறை சூடியென்றாரம்பித்து ஸ்தோத்திரஞ் செய்தவளவில், நமக் கன்போடு செய்யத்தக்க அருச்சனை பாடலே யாமென் றநுக்கிரகித்தந்தர்த் தானமான வற்புத சரிதத்திற்கியைய, செவிக்கினிய கேள்வியில்லாதபோது

தேகசமாட்சனூர்த்தஞ் சிறிதுணவு செய்வ துசிதமெனத் திருவள்ளுவ நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், நாச்சுவையினுஞ் செவிச்சுவையே சிறப்பென்றறிக. (சசு)

## சாக்கிய நாயனார்.

அங்கசன்பூ வெல்லா மடுகணையே சாக்கியர்கைச்
செங்கலெல்லாஞ் சங்கரர்க்குத் தேமலரே—செங்கேழ்க்
கணைகொடிதி யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

(இ-ள்) மகாவிஷ்ணுபுத்திரனாகிய மன்மதன் மகாதேவர்மேற் போட்டது மல்லிகைப்புஷ்பமாயிருந்து மது அவன் மரணத்துக் கேதுவாயிற்று. காஞ்சிபுரத்திலே சமணர் மதத்தைச் சார்ந்த சாக்கிய நாயனார் பூர்வ புண்ணிய விசேடத்தால் அகத்திற் சிவபக்தி மேலிட்டுச் சிவலிங்கார்ச்சனையிற் பிரீதியுண்டா யொருநா ளொருவெள்ளிடையிற் கண்ட சிவலிங்கத்தில் தன்கையிற் கிடைத்த செங்கலை யெறிந்து அப்பிரகாரமே தினந்தோறும் வழுவாது செய்துவந்த அகப்பத்தியாற் சிவபிரானுடைய திருவடி யடைந்த திவ்விய சரிதத்திற்கியைய, அழகிய அம்பாற்றுன்பமும் வளைந்த வீணையாலின்பமும் விளைவதுபோல அரியதவசிகளையும் அவரவர் செயல்கண்டறிந்து கொள்ளவேண்டுமென, நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், புறத்தொழில் நோக்காதகக் குறிப்பறிந்து கொள்ளவேண்டிய தவசிய மென்றறிக. (சஎ)

## சிறப்புலி நாயனார்.

எய்தமகிழ்ந் தின்சொலுரைத் தீசனடி யார்க்கிதமே
செய்தனமே செய்தார் சிறப்புலியார்—வெய்துற்றூர்
மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(இ-ள்.) திருவாக்கூர் வாசியாகிய சிறப்புலி நாயனார் சிவனடியார்களைக் கண்டவுடன் கனிந்தினியவார்த்தை கூறிக் களிப்புடையவரா யவர்களுக் கறுசுவை யடிசிலாடையாதி வேண்டிய அளவுவிருப்புடன் கொடுத்தும் விசேட யாகங்கள் செய்து ஸ்ரீபஞ்சாட்சர ஜெபநிட்டராயிருந்து அநேகவிதமான சிவபுண்ணிய மேலீட்டாற் பரகதியடைந்தனரென்றதற்கிலக்கியமாக மூகந்தால் வாடுமெனிச்சப்பூ முகம் வேறுபட்டுப் பார்த்தாலும் விருந்தினர் வாடுவரென்பதாகச் செந்நாப்போதார் திருவாய் மலர்ந்துள்ளாராதலின், அகத்தி லன்புடனினிய வார்த்தைகூறி னியாரும் வசப்படுவரென்றறிக. (சஅ)

## சிறுத்தொண்ட நாயனார்.

காய்க்கறிவே றென்று தொடாக் கள்ள வயிரவர்க்கோர்
சேய்க்கறிசெய் திட்டார் சிறுத்தொண்டர்—வாய்க்கினிதா
யின்று மிரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

(இ-ள்.) திருத்தொண்டர்களின் அன்பு மேலீட்டைச் செகத்தோர்க் கறிவிக்கும் பொருட்டுச் சிவப்பெருமானோர்வயிரவவடிவந் தாங்கித் திருச்செங்காட்டங்குடிச் சிவாலயத்தின்கணுள்ள திருவாத்தி நிழலிலெழுந்தருளி யிருந்தனரவரைச் சிறுத்தொண்டநாயனார் வணங்கித் திருவமுதுண்ண வழைக்க, நாம் நரமாமிசந்தவிர நாட்டிலுள்ள காய்கறி வேறொன்று முண்ணோமென் றுரைத்த வளவி லுடன் பட்டவராய்த் தமதொரே புதல்வரான சீராளரை யழைத்து மனைவி பிடிக்க மணங்கோளுமை லறுத்துக் கறி சமைத்தமுதுபடைத்ததைக் கண்ணுற் றுடனுண்ண உமது புதல்வனை யழைப்பிவியு மென் றாக்ஞாபித்தபடியே கூப்பிடவும், அருமைத் திருமகனோடிவரக் கண்டெடுத்துள்ளே சென்ற அளவில் பூர்வ வயிரவ வடிவ மறைத்து ரிஷபா ருடராய்க் காட்சி கொடுத்து, தம்பதிகள் தனயன் தாதியையுந் தம்முடன் கைலைக் கழைத்துச் சென்ற காதைக்கியைய, யாசகரிச்சித்த பொருளை யடைந்த வினிய முகத்தைப் பார்க்கு மட்டுமே யிரக்கப்படுதலுந் துன்பமென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், அடியவர் விரும்பியதை யக்கணங் கொடுத்தலே அறத்திற் கழகென்றறிக. (சக)

## சேரமான்பெருமா ணாயனார்.

நெறிவார் சடையரைப்போ லீணிலத்தோர் செய்கை
யறிவார் கழறிற் றறிவார்—அறிவாரார்
எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

(இ-ள்.) நீண்ட ஜடாபாரத்தைத் தாங்கிய வொப்பற்ற பரமசிவமானதுயிர்க் குயிராயிருந்தறியுந் தன்மை போலச் சேரதேயத் திறைவராகிய சேரமான் பெருமாணாயனாரும் மனிதர்கள் பாஷையன்றிப் பசு பட்சியாதிகளின் பாஷைகளையுந் தெரிய வல்லவராய் இருந்ததினாற் கழறிற்றறிவாரென்று நாமமும் பெற்று ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளின் சிநேக வைபவத்தாற் கைலாசபதியின் கணங்களுக்குத் தலைவராயிருக்கும் பெரும் பேறும் பெற்றன ரிச்சரிதைக்கியைய, யாவரிடத்து, நடப்பவைகளை யொருவாறறி

தல் வேந்தன் றொழி லென்று தமிழ் வேதமுங் கூறுகின்ற தாதலின், உள்ள நிகழ்ச்சி யறிந்து சொல்பவரிடத் துலகர் வழிபடுவரென்றறிக. (௩0)

சேரர்கோ னீதித் திரவியங்கள் சுந்தரர்பாற்
சோரர் கவர்ந்தொளித்துஞ் சோர்வுண்டோ—பாரி
லழுக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

(இ-ள்.) சேரமான் பெருமாள் சிநேகராகிய சுந்தர மூர்த்திகளுக்குக் கொடுத்தனுப்பிய திரவியப் பொதிகளைத் திருவருளாக்ஞையாற் றிருமுருகன் பூண்டிக்குச் சமீபத்திற் றிருடர் பறித்துக்கொண்டு போனதாற் சிறிதேனுங் குறைவு பட்டதோ அடிகள் பதிகம் பாடவே, சகலைசுவரியமுந் திரும்பவுங் கிடைத்த தென்னுந் திவ்விய சரிதைக் கிலக்கியமாகத், தீயவழியிற் றேடும் பொருள் சிதறிப் போய்விடும். நல்வழியில் வந்த பொருள் சிதறினும் நற்பயனைத் தருமென நாயனாருங் கூறி யிருக்கின்றாராதலின், நல்லார் பொருளுக்கு நாசமே யில்லை யென்றறிக. (௩௧)

கணநாதய நாயனார்.

நாட்டிலடி யாரையெல்லா நாதன் பணிவிடையே
காட்டிவாழ் வித்தார் கணநாதர்—வேட்டிவர்தாஞ்
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

(இ-ள்.) சீகாழியிலவதரித்துத் திருத்தோணியப்பருக்குத் தினந்தோறுந் திருப்பணி செய்வதுடன் தம்மை விரும்பி வந்தடைந்த அடியார்களையுந் திருநந்தன வனம் வைத்தல், திவ்வியமான புஷ்பங்கள் கொய்தல், திருமஞ்சன மெடுத்தல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கேற்றல், திருமுறை யெழுதல் வாசித்தல் முதலிய திருத்தொண்டுகளிலே அவரவர் தரமறிந்து சேர்ப்பித்துத், தினந்தோறுஞ் சிவாகமவிதிப்படி செய்து வந்த விசேடத்தாற் சிவகணங்களுக்கு நாதராகப் பெற்ற கண நாத நாயனாரது காருண்ணியத்திற்கிணைய, பிரயோசனங் குறிக்காமற் பிறர்க்குச் செய்த வுதவிக்கு மண்ணுலகமும் விண்ணுலகமும் கைமாறாக் கொடுத்தாலு மீடாத லருமை யென நாயனாரு நவின்றுள்ளா ராதலின், பலன் கருதாது செய்த வுதவியே மேற்பயன் படுமென்றறிக. (௩௨)

## கூற்றுவ நாயனார்.

ஆற்றரிதா மீச னடிமுடியா கப்புனைந்து
போற்றி மனக்கவலை போக்கினார்—கூற்றார்
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

(இ-ள்) களந்தை வேந்தராகிய கூற்றுவநாயனார் ஸ்ரீ பஞ்சாக்ஷர ஜெபமுஞ் சிரத்தையோடு செய்த தபோபலத்தாற் செல்வமிகுதியுந் தேசங்களிலுள்ள குறுமன்னர் பலரையும் வெல்லுந்திறமும் பெற்றிருந்து முடிசூடியாளும் பெரும்பேறு பெறுமைபற்றிப் பெருங்கவலை கொண்டிருந்த அடிகளுக்குப் பெரும்பற்றப் புலியூர்க்கிழவர் சொப்பனத்திற் றோன்றித் தமதொப்பற்ற பாதத்தை அவர் சிரசிற் சூட்டியவுடனே, அவர் சகலவருத்தமும் நீங்கி மனுநெறிதவறாதரசியற்றிச் சிவபதமடைந்த திவ்வியசரிதத்திற்கேற்ப, ஒரு விதத்தினாலும் நிகரில்லாத பரமசிவ பாதார விந்தத்தைச் சேர்ந்தவர்க்கே மனக்கவலை மாறுமென்று நாயனாருங் கூறியுள்ளாராதலின், திருவடிப்பேறே சித்த சாந்தியைத் தருமென்றறிக. (ருங)

## சுந்தரமூர்த்தி நாயனார்.

ஆரூர ரீசனைத்து தாக்கியநாட் கூன்குருடு
தாரோடு தாம்பூலந் தாங்கவினை—தீர்வார்
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

(இ-ள்) அடியவர்க்கெளியரான அண்ணலார் துடியிடைப்பரவையார்பாற் றூதுசென்று சம்மதந் தெரிந்து சுந்தரர்க் கறிவித்தவுடன் குதூகலத்துடன், பரவையார் வீட்டுக்குச்செல்லுஞ் சமயத்தில் அன்புடன் றெரிசித்த அங்கவீனர், அந்தகர், தத்தங்குறை தீரப்பெற்றதுடன் அழகிய புஷ்பமாலையாதி யடப்பந்தாங்கியவர்களுடைய பூர்வவினையனைத்தும் நீங்கிச்சுகமடைந்தனரென்னுஞ் சரிதத்திற்கியைய, மகான்கள் பெருமையையவர்களுடைய வாக்குப் பலிதங்கொண்டே மதித்துக்கொள்ளலாமென்று திருவள்ளுவ நாயனாருங்கூறியிருக்கின்றாராதலின், வாக்குப்பலிதம் மகிமையையுண்டாக்குமென்றறிக. (ருச)

## பொய்யடிமையில்லாத புலவர்.

மதுரையிலே மேழ்புலவர் வல்லசிவன் பாத
மதுபொருளா கக்கவிசெய் தாரே—புதுமைபோ

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்று டொழாஅ ரெனின்.

(இ-ள்) துவாதசாந்த புரமாகிய மதுராபுரியிலே வாக்கின்வல்லவரான கடைச்சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மரும், இயற்கையாசாரம், விபூதி ருத்திராக்ஷதாரணம் ஸ்ரீ பஞ்சாக்ஷர செபநிட்டராய்ப் பரமசிவனையே மெய்யன்போடு பாடுந் திறத்தினராய் விளங்கிச் சிவபதமடைந்தனுற் பொய்யடிமையில்லாத புலவரெனப்புகழ்பெற்ற புண்ணிய சரிதத்திற்கியைய, கடவுளிடத்தில் மெய்யன்பிலாதவர் கற்ற கல்வி யறிவினுற் பெற்ற பயன் யாது மின்றெனு நான்முகனுரும் நவின்றுள்ளாராதலின் கல்விக்குப் பயன் கடவுள் வழிபாடென்றறிக. (ருரு)

## புகழ்ச்சோழ நாயனுர்.

தங்களத்தில் வீழ்ந்த சடைத்தலைகண் டஞ்சியஞ்சிப்
பொங்கழற்குள் வீழ்ந்தார் புகழ்ச்சோழர்—எங்குமறுத்
தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

(இ-ள்) உறையூரின்கண்ணே சோழதேசத்தை யாண்டுகொண்டிருந்த சோழராஜாவொருவர் ஈஸ்வரகைங்கரியம் அடியார் பக்திவிடையருது செய்துவருநாளிற் றமதாக்ஞைக்குளடங்காதிருந்த அதிகனென்பவன் சேனைகளை வென்று படைத்தலைவர் கொண்டுவந்த பல சிரசுகளுட் சடைத்தலை யொன்றினைக்கண்டஞ்சியரசுரிமையைப் புதல்வர்பா லொப்புவித்து அக்கினிக்குழியுண்டாக்கும்படி யுத்தரவு கொடுத்து அந்தச்சடைத்தலையைப் பொற்றட்டிலேந்தித்தாமும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஸ்மரித்துக் குழியிலிறங்கிச் சிவனடிக்கீழமர்ந்தென்றும்பொன்றுதபுகழ்பெற்ற புகழ்ச்சோழ நாயனுரது புண்ணிய சரிதத்திற்கேற்ப, தீயசெயல்தீமையைத் தருதலாற்றீயினு மஞ்சத்தக்கதெனத் திருவள்ளுவநாயனுருங் கூறியிருக்கின்றுராதலின், சிவவேடத்தினர்க் கோரபாயம் வரிற் சிவனடியாருள்ளஞ் சகிக்காதென்றறிக. (ருசு)

## நரசிங்கமுனையரைய நாயனுர்.

மூரி நரசிங்க முனையரையர் மாதவருட்
சீரியதூர்த் தர்க்கிரட்டி செய்தாராம்—பூரிதா
னற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(இ-ள்) திருமுனைப்பாடிநாட்டிலே திருநீற்றையே பெருஞ்செல்வமாயுஞ் சிவனடியாரை வழிபடலே சிறந்தபணியாயுங்கொண்டு சிவாலயகைங்கரியம் சிவமதபரிபாலனூர்த்த மத்தேசத்தின் அரசுரிமையை வகித்திருந்த நரசிங்கமுனையரையநாயனார் திருவாதிரைதோறும் சிவனடியார்க்கமுதூட்டியவர்களுக்குப் பொன்காணிக்கையாகக் கொடுத்தனுப்புவதையறிந்தவோர்தூர்த்தன் அடியார்போல வேடந்தரித்து வந்ததையறிந்த நாயனார் அவர்க்கிருமடங்கு பொன் கொடுத்து வணங்கியனுப்பினதினாற் சிவனது திருவடியடைந்தாரென்னுஞ் சரிதத்திற்கிலக்கியமாக, பெரியோர் பிறர் குற்றத்தை மறைப்பர். சிறியோர் பிறர் குற்றத்தையுரைப்பரெனத்திருவள்ளுவநாயனார் வாக்கியமுமிருத்தலின், சிவவேடம் பூண்டாரைச் சிறியரென்றிகழலாகாதென்றறிக. (கஎ)

## அதிபத்த நாயனார்.

மேனாட்செல் வங்கெடினு மீன்வலைவீ சிக்கோரொண்
மீனாளும் விட்டா ரதிபத்த—ரானா
திடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(இ-ள்) சோழமண்டலத்திலே நாகபட்டின சமீப நுளைப்பாடியின்கண் பரதவகுலத் தலைவராயிருந்த அதிபத்தர் தம்மரபிற்கேற்க வலைவீசுவதிற் கிடைக்குந்தலைமீனை மதுரையிலே வலைவீசித் திருவிளையாடல் செய்த சிவபெருமானுக்கென்று விட்டுவந்த நியமப்படியே வறுமைவந்தடைந்த காலத்தும் மறவாது செய்துவருநாளி லோர்நாள் இரத்தினவுறுப்புக்களமைந்தவோர் மீன்கிடைத்ததையும் ஆண்டவனுக்கென்றே ஆழ்கடலில் விட்டவுடன் ரிஷபாரூடராய்ச் சிவபெருமான் தெரிசனங்காட்டித்து ஸ்ரீ கைலாசத்திலே சிவனடியார்களுடன் வாழுந்திறமுமளித்தனரென்னுந் திவ்விய சரிதத்திற்கியைய, இயற்கையறிவுடையோர் எவ்விதவறுமை வந்துற்ற விடத்துந் தாமேற்பட்டவெக்கருமத்திலுந் தாழா ரென்று தமிழ்வேதமுஞ் சாற்றியுள்ளதாதலின், வறுமைவந்துற்ற போதுஞ் சிறுமை பாராட்டாதிருத்தலே வண்மையென்றறிக. (கஅ)

## கலிக்கம்ப நாயனார்.

மெய்யடியார் தாளில்லாள் வெள்கக் கழுவிவாள்
கையடியங் கீர்ந்தார் கலிக்கம்பர்—பொய்யடிக்கொண்
டல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்.

(இ-ள்) சோழமண்டலத்தைச்சார்ந்த பெண்ணாகடத்தின்க ணிருந்த கலிக்கம்பநாயனார், சிவலிங்கத்தை வழிபடினுஞ் சிவனடியாரை வழிபடாதொழுகின் சிறிதும்பயன்படாதென்று செப்புஞ் சிவாகமவிதியையறிந்தவராய்ச் சிவனடியார்களைத் தேடியழைத்துவந்துபசரித்து வருங்காலத்திலோர்நாள்வந்த அடியாரொருவர் பூர்வம் தமதேவலிலிருந்த பணிவிடைக்காரரெனவாலோசித்து மனைவியார் பாதசுத்தியினிமித்தம் நீர்வார்க்கத் தாமதித்தமையைக்கண்டு கோபமேலிட்டவள்கையை வாளாலறுத்துந்தாமேயப் பணிவிடையைவழுவாது செய்து வாழ்ந்திருந்து மகத்தான சிவபதமடைந்தனரென்னு மனுபவத்திற்கியைய, மனையாளிடத்தச்சமுள்ளவன் மகான்கள் முதலியோர் பணிவிடைக்குரியனாகானென நாயனாருங்கூறியிருக்கின்றாராதலின், மனைவிக்கஞ்சினால் வாய்க்காதில்லறமென்றறிக (௪௯)

## கலிய நாயனார்.

எள்ளா விளக்கரன்பா லேற்றவே வாள்கலியர்
கொள்ளாரே லேதுங் கொடாருலகி—லுள்ளார்கொ
ணல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

(இ-ள்) செல்வநிலையாமையுந் தேகநிலையாமையுமறிந்து சிவபுண்ணியஞ் செய்வதே திரமெனத்தெளிந்து, திருவொற்றியூரின்கணுள்ள சிவாலயத்திற்றிருவிளக்கிட்டு வந்த கலியநாயனாருக்குங் கலிவலிமையாற் கருதியபணிவிடைக்குத் தடைநேரிடும்படி தீபம்போடத் தயிலங் கிடையாமற்போகவுங் கலங்காது தன்கழுத்தை யரிந்து உதிரநெய்வார்க்கவெண்ணி வாளைப் பூட்டியமாத்திரத்தில் பரமசிவம் ரிஷபாரூடராய்த் தோன்றிக்காட்சிகொடுத்துத் திருவடி சேர்த்தனரென்னுந் திவ்வியசரிதைக் கியைய, கல்லாதவரிடத்து வருஞ் செல்வமுந் துன்பந்தரும். கற்றவரிடத்து வரும் வறுமையுமின்பந்தருமெனத்திருவள்ளுவநாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், வறுமைக்காலத்து மனோதிடத்தால் வாய்க்கு மின்பமென்றறிக. (௫௦)

## சத்தி நாயனார்.

அண்ணலடி யாரையிகழ்ந் தார்நரகி லாழாதே
தண்ணளியா னுத்தறித்தார் சத்தியா—ரெண்ணமுற
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(இ-ள்.) சோழநாட்டிலே வரிஞ்சியூரின்க ணிருந்தவரும் பரமசிவனுடைய திருவடிகளை மறவாதவருமாகிய சத்திநாயனார் சிவபிரானிடத்திற்

திடபக்தியுடைய சாதுக்களை நிந்தித்தவர்கள் பாழ்நரகெய்தாமலிருக்கும் பொருட்டுக் காருண்ணியத்தினாலிகழ்ந்து பேசும் அதிபாதகருடைய நாக்கைத்தண்டாயத்தாலிடுக்கிக் கத்தியினாலரிதலாகிய அருமைத்திருத்தொண்டை நெடுங்காலந்திடமாக நடத்திவந்து சிவபதமடைந்தன ரென்னுஞ் சரிதைக் கேற்ப, மற்றை யிந்திரியங்களை யடக்கமுடியாவிடத்து நாக்கையாவதடக்காவிடிற் சொற்குற்றத்தாற் சோர்வுண்டாமென நாயனாரும் நவின்றுள்ளாராதலின், வாக்கையடக்கினால் வம்பேயில்லை யென்றறிக. (௬௧)

## ஐயடிகள் காடவர்கோ னாயனார்.

நாடலரு நற்பதிக ணண்ணிநல் வெண்பாவாய்த்
தாடலரா னுக்களித்தா ரையடிகள்—காடவர்கோன்
றூயின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(இ-ள்) சிவசமய நெறிதழைத்தோங்கும் வண்ணமே செங்கோல் நடாத்திய ஐயடிகள் காடவர்கோன் ஆண்டதோரரசுதனிலும் போகத்துமாசையற்றவராயரசுரிமையைப் புத்திரன் பாலொப்புவித்து நிவர்த்தராய் சிவஸ்தலங்கடோறுஞ் சென்று தெரிசித்துந் திவ்விய வெண்பாப்பாமாலையொவ்வொன்று பாடிச் சாத்தியுஞ் செகத்தை யுத்தாரணஞ் செய்து சிவபெருமானது திருவடியை யடைந்தாரென்னுந் திவ்விய சரிதத்திற்கியைய, உத்தம சாதுக்கள் தாம் விரும்பத்தக்க கல்வி முதலிய நல்லொழுக்கத்தைக்கண்டுலகமும் விரும்புதலாற் றமதனையே மேன்மேலும் விரும்புவாரென நாயனாரும் நவின்றுள்ளாராதலின், கல்வி யவசியங் கற்கவேண்டுவதெனவறிக. (௬௨)

## சுந்தரமூர்த்தி நாயனார்.

நீரூர் முதலையது முன்னுண்ட பிள்ளையைப்பின்
னூரார் பாவா லழைப்பித்தார்—பாரூர்
பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(இ-ள்) அவிநாசியென்னுஞ் சிவஸ்தலத்தின்கணுள்ள திருக்குளத்திலே சில நாட்களுக்கு முன்னாக முதலையுண்டவோர் பிராமணச்சிறுவனின் மரணத்தால் வார்ச்சலியமடைந்து கொண்டிருந்த பெற்றோரின் மனவருத்தநீங்கும்படி காருண்ணியமூர்த்தியான சுந்தரமூர்த்திசுவாமிகள் கடவுள்பேரிற் பதிகம் பாடவாரம்பித்து நான்காம் பாட்டினீற்றடியில் "கரைக்கால் முதலையைப்பிள்ளைதரச் சொல்லுகாலனையே" யென்று வாக்கியம்

பிறந்தவுடன் சென்றஆண்டுகளுக்குத் தக்க தேகத்துடன் பிள்ளையை யிய மன் முதலை வாயிலாகக் கரையிலுமிழச் செய்த வற்புத சரிதைக்கியைய மக்கள் பிறப்பியல் பொக்கு மாயினுஞ் சிறப்பியல் பொவ்வாதென நாய னருங்கூறியுள்ளாராதலின், சிறப்புடைய சென்மமே சிலாக்கியமான தென் றறிக. (சுரு)

## கணம்புல்ல நாயனர்.

கணம்புல்லர் நெய்வாங்கக் காணர் கணம்பு
லிணங்குதலை நெய்விளக்கொன் றிட்டார்—வணங்கரன்பாற்
றுன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

(இ-ள்.) வடவெள்ளாற்றின் கரையினுள்ள இருக்கு வேளூரிலே யவதரித்த கணம்புல்ல நாயனர் தாம்பெற்ற பெருஞ் செல்வமனைத்தை யுஞ் சிவாலயத்திற் றிருவிளக்கிடுதலாதி சிவபுண்ணியத்திற் செலவிட்டு மிக வறுமை வந்துற்றகாலையினு மனந்தளராது சிதம்பரத்தையடைந்து கணம்புற்களைக் கொய்துவந்து விற்று நெய்வாங்கித் திருப்புலீச்சரத் திற்றிருவிளக்கிட்டு வந்த காரணத்தினல் தாம் இந்நாமம் பெற்றனர் ஓர் நாள், புல் விலைப்போகாததினல் மனநொந்துபுல்லையேவிளக்கிற்குப்பதி லாயெரிக்க வப்புல்லுந் தாம் நியமித்திருக்கிற காலம்வரை யெரிக்கப் போ தாமைநோக்கி, தம் சிகையையே மடித்தெரிக்கவுங் கடவுளானவரவருக் குக் கைலாச பதவி கொடுத்தன ரென்னுங் காதைக் கேற்ப, முதலிற் றுன் பந்தருவதாயினு முடிவிலின்பந் தரத்தக்க தொழில்களிற் றுணிவுடன் மூய லவேண்டுமென முதற்பாவலரு மொழிந்தனராதலின், துணிந்தவர்க்குத் துன்பந்தோன்றதென் றறிக. (சுச)

## காரி நாயனர்.

பாரின்மூ வேந்தர் பரிசிலுத வப்பாடிக்
காரியா ராலயங்கள் கட்டினர்—ஓரிடமோ
யாதானு நாடாமா லூராமா லென்றொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(இ-ள்) திருக்கடவூரிலே திராவிடபாஷாவிற்பத்தியிற் சிறந்த காரி நாயனர் பாடியகோவையை, சேரசோழ பாண்டியர்களிடத்து அரங் கேற்றி, அவர்களால் வெகுமதியளிக்கப்பட்ட வேராளமான திரவிய சகாய த்தாற் பலவிடங்களிற் சிவாலயங்கள் கட்டுவித்தும்,சிவனடியார்க்கு வேண் டுவன வெறுப்பக்கொடுத்தும், தேசமெங்குஞ் சிவகீர்த்தி பெருகச் செய்து

ஸ்ரீகைலாச பதவியடைந்த திவ்ய சரிதத்திற் கேற்ப, கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாஞ் சிறப் பென் றறிந்திருந்துஞ் சிலர்கள் சாமளவுங் கல்லாதிருக் கின்ற காரணமியாதென நாயனாரும் வியந்துரைத்தனராதலின், அக்கரை யாகக் கற்க முயல்வாயென்பதை யூகித்தறிக. (௬௫)

## நெடுமாற நாயனார்.

பழுதறுசம் பந்தரெதிர் பாழமணர் தாழ
வழுவறநெல் வேலி வென்ற மாறன்—கழுவிட்டா
னந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

(இ-ள்) திருநெல்வேலிப் போர்க்களத்தில் வெற்றிபெற்ற கூன் பாண்டியன், குற்றமற்ற ஞானவேந்தருஞ் சமயாசாரியருமாகிய சீகாழிச் சம்பந்தப் பிள்ளையார் சமணப்பதர்களை வாதில் வென்றபொழுது மனுநீதி தவறாது எண்ணாயிரவரையுங் கழுவிலேற்றியுங் காருண்ணிய மூர்த்திகள் கரத்தாற் றிருநீறிடப்பெற்றுக் கூனிமிர்ந்து நெடுமாறனெனப் பேர்பெற் றும் மெய்யுபதேசமகிமையால் மேலான சிவபதமு மடைந்தனரென்னுந் திவ்விய சரிதைக்கிலக்கியமாக, வேதநெறியு மிக்க தானமுந் தவமுந் தழைத் தோங்குதற்கு வேந்தனது செங்கோன்மையே யேதுவெனத் தேவர்திருவா க்குமிருத்தலின், அரசுநீதியே யறங்களுக்காக்க மென்றறிக. (௬௬)

## வாயிலார் நாயனார்.

ஆயறிவு தீப மகமலரான் பேயமுதங்
கோயிலிறைக் கோர்மனமாய்க் கொண்டுவந்தார்—வாயிலா
ரோர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(இ-ள்) திருமயிலாப் பூரிலே யவதரித்த வாயிலார்நாயனா ரென்ப வர் பரமசிவனை இடையறாது, அகத்திலாராதிக்கவெண்ணி யொரு பொழுதும் மறவாத மனக்கோயிலுள்ளிருத்தி ஞானவிளக்கேற்றி யகமென் னுமலராலர்ச்சித்து, அன்பாகிய வமுதத்தை நைவேதித்தலாகிய ஞான பூசையை நாடோறுஞ் செய்வாராகி யானந்த பரவசராய், அரிய சிவபதம டைந்தன ரென்னுஞ் சொல்லற்கரிய சுவாநுபூதிக்கேற்ப, மனமானது உள்ளதையுணர்ந்து கொண்டிருந்தால் பிறவியில்லையென்று நாயனாருங்கூறி யிருத்தலின், உண்மையுணர்ந்தார்க்கு மேலும் பிறவியில்லை யென்றறிக.()

## முனையடுவார் நாயனார்.

வினையடுவார் வந்தடுக்க வென்றுகொண்ட கூலி
தனையடுவார் சைவர் தமக்கே—முனையடுவார்
தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ-ள்) சோணாட்டின் திருநீடூரின்கண் ணவதரித்த வேளாளர் குல திலகராகிய முனையடுவார் போர்முகத்திற்றோற்றுவந்தடைந்தவர்க்கபயங் கூறியவருடன் மீட்டுஞ் சண்டைக்குச் சென்று சத்துருக்களைச் செயங் கொண்டு, அவர்கள் ஜெயக்களிப்பாலுதவும் பொருளைக்கொண்டொப்பற்ற பரமசிவனடியாரை யுபசரித்தறுசுவையமுதூட்டியாதரித்துவந்த தொண்டின் விசேடத்தாற் சிவபதமடைந்ததற்கிலக்கியமாக, தகுதியுடையவர்கள் சம்பாதித்த பொருளெல்லாந்தக்கவிஷயங்களி லுபயோகித்தற் பொருட்டே யென நாயனாருங்கூறியுள்ளாராதலின், நல்லார் பொருள் நன்மைக்கே யுதவு மென்றறிக. (௬அ)

## சுந்தரமூர்த்தி நாயனார்.

தென்புகலூ ரீசனையுஞ் சென்றுபணிந் தாரூரர்
பொன்புகலாப் பெற்றார் புகழ்பெற்று—ரின்புற்றார்
ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளிளை யிரண்டு மொருங்கு.

(இ-ள்) பரமசிவ தோழராகிய ஸ்ரீசுந்தர மூர்த்தி நாயனார் திருவிழாச் செலவிற்குப் பரவையாருக்குப் பொன்கொடுக்க வேண்டுமென்னும் விருப்பத்துடன் காவேரி நதியின் தென்கரையிலுள்ள திருப்புகலூரை யடைந்து சிவபெருமான்மேற் பதிகம்பாடி, திருக்கோயிலின் முகப்பிற் சிரமபரிகாரார்த்தஞ் செங்கற்களைத் தலையணையாக வைத்துச் சற்று துயின்ற சமையத்திற் செங்கற்களெல்லாம் பொற்கற்களாகக்கண்டு பேரானந்த மடைந்தனரென்னுந் திவ்விய சரிதத்திற் கியைய, நல்ல வழியிற் பொருளை மிக விருத்தி பண்ணினவர்க்கு அறமு மின்பமு மெளிதிற் கிடைக்கு மென்று நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், பொருளுடையார்க்கே புகழுடன் புண்ணியமு மின்பமு மெளிதிற் கிடைக்கு மென்றறிக. (௬௯)

## கழற்சிங்க நாயனார்.

தொழுச்சங் கரன்சூடாத் தூய்மலர்மோந் தாள்கை
விழுச்சென் றரிந்து விடுத்தார்—கழற்சிங்கர்

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(இ-ள்) பரம சிவனுடைய திருவடிகளையே யன்றி வேறொன்றையும் ஸ்மரியாதவரும் வடபுலத்தரசர்களை வென்று சைவசமயந் தழைத் தோங்கும்படி யரசியற்றினவருமான கழற்சிங்க நாயனார் சிவஸ்தலங்க டோறுந் தெரிசனஞ் செய்துகொண்டு திருவாரூரடைந்து வன்மீகநாதரை வணங்கிப் பிரதக்ஷணம் வருகையி லவர் மனைவியார் மகா தேவருக்குச் சாத்தாது மண்டபத்தருகிற் கிடந்தவோர் புதுப்பூவை யெடுத்து மோந்தது கண்டஞ்சி அவள் கையை வாளால் வெட்டி வீழ்த்தி, அநேககால மனுநெறி வழுவாதரசியற்றியரனடி நிழலை யடைந்தன ரென்னுமநுபவத்திற் கிலக்கியமாக, குற்றஞ்செய்தவரைப் பட்சம் பாராட்டாமல் தக்க சிக்ஷை விதிப்பதே செங்கோன்மை யென்று திருவள்ளுவ நாயனாருந் திருவாய் மலர்ந்துள்ளாராதலின், அன்பிற்குரிய மனையாளையும் தண்டித்தது, அரச நீதிக் கோராபரண மென்றறிக. (௭௦)

## இடங்கழி நாயனார்.

நடங்கழியா ரன்பர்க்கே நற்பொருள்களெல்லா
மிடங்கழியா ரன்பினெடுத் தீந்தார்—முடங்கா
அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

(இ-ள்) கோனாட்டின்கணுள்ள கொடும்பாளூரிலே சைவ நெறியும் வைதிக வொழுக்கமுந் தழைத்தோங்க வரசியற்றிய இடங்கழி நாயனார் இடையறாது கனகசபையின்கண் ஆனந்தத்தாண்டவம் புரியாநின்ற பரம சிவபக்தரொருவர் நெற்பண்டாரத்தைத்திருடினதை யறிந்து அவரை வருத்தி விசாரிக்க அடியவர்க் கமுதூட்டு மாசைமேலீட்டால் இவ்வண்ணஞ் செய்தேனென இறைவன் மகிழ்ந்து, இவரன்றோ நமக்குப் பண்டாரமென உபசரித்து, சிவனடியாராயுள்ளார் நெற்களஞ்சிய மன்றி நிதிக்குவைகளையு மெடுத்துக் கொள்க வென்று பறையறைவித்துப் பலகால மரசியற்றிப் பரமபத மடைந்தன ரென்னுஞ் சரிதைக்கியைய, அருளென்னுங் குழந்தை செல்வ மென்னுஞ் செவிலித்தாயால் வளருமென நாயனாருங் கூறியிருத்தலின், அன்பு மேலீட்டால் அடியார் செய்யு மல்லவையு நல்லவை யாமென்றறிக.

## செருத்துணை நாயனார்.

கருத்தனணி பூவைக் கழற்சிங்கன் றேவி
யருத்தியின்மோந் தாள்மூக் கரிந்தார்—செருத்துணையார்

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடெ
னுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(இ-ள்) திருவாரூரையடைந்து திருத்தொண்டு செய்துகொண்டிருந்த செருத்துணை நாயனார் ஆங்கு தெரிசனார்த்தம் வந்த தேசாதிபதியாகிய கழற்சிங்கமனைவியார்மண்டபத்திற்கருகிற் கிடந்த ஓர் பூவையெடுத்து மோந்த மூக்கை யரிந்து நெடுங்காலந் தொண்டுசெய்து கொண்டிருந்து சிவபதமடைந்த திவ்விய சரிதைக் கிலக்கியமாக,சௌரிய மில்லாதவர்க்கு வாளாயுதத்தாலுஞ் சபைக்கஞ்சுவோர்க்குச் சகல கலைக்ஞானத்தாலும் பிரயோசன மின்றெனப் பெருநாவலர் கூறியிருக்கின்றாராதலின், திடபக்தியுடையார்க்குத் தீரத்துவமேயுடன் பாடென்றறிக. (எஉ)

## புகழ்த்துணை நாயனார்.

வற்கடம்வந் தூண்போய்மெய் வாடிப் புகழ்த்துணைகை
நற்கலசம் வீழவரு னார்கொடுத்தார்—பொற்காசு
தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.

(இ-ள்) செருவிலிபுத்தூரின் கண்ணே சிவாசாரியர் குலத்திலவதரித்தவராகிய செருத்துணை நாயனார் ஆகமவிதிப்படி பரமசிவனை யல்லும் பகலுமாராதித்து வருங்காலத்திற் றேசமெங்கணும் பஞ்சமிகுதியாலுணவு கிட்டாமற் பசிநோய் வருத்தவும் மனச்சோர்வடையாதவரா யோர்நாட் சிவலிங்கப் பெருமானுக்குத் திருமஞ்சன மாட்டும்பொழுது கைசோர்ந்து கலசந் திருமுடியிலும் தாந் திருவடியிலும் விழுந்து அரிதுயில்கொண்ட பொழுது பக்தஜன தயாளுவாகிய பரமசிவனவர் சொப்பனத்தே தோன்றிப் பக்தனே பஞ்சம் நீங்கும் வரை யுனக் கோர் படிக்காசு தினங் கொடுப்பிப்போமென்றுஆக்ஞாபித்த பிரகாரம் பெற்றுச் சிவபணிவிடையை வழுவாது செய்திருந்து சிவபெருமான் றிருவடி நீழலையடைந்த திவ்விய சரிதத்திற்கியைய, ஊழாலாகாதெனினு முடம்பு வருந்திய முயற்சிக்குத் தக்க பயன் பாழாகா தெனத் திருவள்ளுவநாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், விடா முயற்சி வீண்போகாதென்றறிக. (எ௩)

## கோட்புலி நாயனார்.

பொலிகிளைகொன் றார்கோட் புலியார் விரை
கலிகடந்த குற்றங் கடிந்தா—ருலகிற்
குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

(இ-ள்) சோழ தேயத்தின்கண் நாட்டியத்தான் குடியிலே வேளாளர் குலத்திலவதரித்துச் சேனாதிபதி உத்தியோகத்திலமர்ந்திருந்த கோட்புலி நாயனார் பரமசிவ பூஜைக்கென்று பதனம் பண்ணி வைத்துவிட்டுப் போயிருந்த நெல்லைப் பசிமிகுதியால் முன்னெடுத்துப் பின் கொடுத்தல் தோஷமாகாதெனு மறியாமையா லெடுத்துண்டதை யறிந்த பக்தரானவர் கோபங்கொண்டு அதிபாதகமாகிய சிவத்துரோகஞ் செய்த இவரை வாளாற் றுணிப்பேனென்று சிசுமுதற் கொல்லவும், சிவபிரான் ஆகாயத்திற் றோன்றித் துணிக்கப்பட்ட சுற்றத்தாரனைவருக்கும் சுவர்க்க மளித்தும் நாயனாரைத் தம்முடனழைத்துச் சென்ற சரிதத்திற் கிலக்கியமாக, அடுத்தவரை யிரட்சித்தலும் அவர்களிடத்தே குற்றம் கண்டவிடத்துச் சிட்சித்தலும் முறையென்று முதற் பாவலர் மொழிந்துள்ளாராதலின், சுற்றத்தாரிடத்துங் குற்றங் கண்டாற் சிட்சித்தலே நீதியென்றறிக. (எச).

## சுந்தரமூர்த்தி நாயனார்.

மாவணங்கைக் கொண்டிடுமுன் வந்தரனார் சுந்தரர்க்கோ
ராவணங்கைக் கொண்டுமறித் தாட்கொண்டார்—நோவ
அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(இ-ள்) வன்றொண்ட மூர்த்தியானவர் மரபிற் குரிய மங்கையரொருவரை மணஞ் செய்ய விரும்பி மணக் கோலங் கொண்டிருந்த சமயத்தில் சம்சாரமாகிற படுகுழியிற் றமது தோழர் வீழாமுன், சாம்பசிவ மூர்த்தியானவர் பூர்வபாத்தியதையை விளக்கும் ஓரடிமை யோலையைக் காட்டிய வளவிலதனைச் சுந்தரர் பறித்துக் கிழிக்க, மறுபடியும் சபையார் முன் போய் மற்றொரு நகலைக் காட்டி ஜெயித்தடிமை யாக்கி யருட்டுறை ஆலயத்துக் கழைத்துச் சென்று காட்சி கொடுத்தாட்கொண்ட வற்புத சரிதத்திற் கியைய, தகாதவை செய்ய நினைத்தாற் றடுத்தும், செய்தா லிடித்தும் புத்தி சொல்ல வல்லவரையே சிநேகஞ்செய்ய வேண்டுமெனத் திருவள்ளுவருங் கூறினாராதலின், இடித்துச் சொல்வாருறவை எப்போதும் கைவிடலாகாதென்றறிக. (எரு)

## பத்தராய்ப் பணிவார்கள்.

வாய்ப்பவரனைத் தொழுது வாய்குழறிக் கண்ணருவி
தோய்ப்பநடுங் கிப்புளகித் தோர்பத்த—ராய்ப்பணிவார்
அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

(இ-ள்) சிவனடியார்களைக் கண்டாற் சாதிவிசாரியாமல் சிவனென வழிபடுதலும் அவர்களுடன் அஞ்சி வார்த்தை கொடுத்தலும், பரமசிவாராதனை நடப்பதைப்பார்த்து மகிழ்தலும், பரமசிவனுடைய திருவடிக்கே சகல புண்ணியங்களையும் சமர்ப்பித்தலும் சிவசரித்திரங்களையே கேட்டலும் பரமசிவனைப் பாடிப் பரவசமாதலும், சதா அவரை மறவாதிருத்தலும், சிவ வேடம் பூண்டதனாற் சீவனம் செய்யாமையுமாகிய குணங்களையுடையவரே யத்தராய்ப் பணிவார்களெனப்படுவதற் கியைய, அன்பின் வழி நிற்குமுடம்பேயுயிர்பெற்ற வுடம்பு, அல்லாதவை யஃதியைத் தோல் மூடிய வுயிரற்ற வுடம்பென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், அன்புடைமையே ஆக மெடுத்ததின் பயனென்றறிக. (௭௬)

### பரமனையே பாடுவார்.

பரமனையே பாடுவார் பாடும் புகழா
லிருவினையுஞ் சேரா ரிவரே—மருளாம்
இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(இ-ள்) அநித்தியத்தை நித்தியமென்றுதரிக்கும் பொல்லா மனிதரையே புகழ்ந்து பாடி வாணாளை வீணாக்காது நித்தியமாய் நின்மலமாய் விளங்காநின்ற பதியாகிய பரமசிவனை வேதாகமங்களால் விசாரித்தறிந்து மெய்யன்போடு திருவடிகளையே தியானித்து மனங்கசிந்துருக உரோமஞ் சிலிர்ப்ப சதா பாடி மயக்கத்தைத் தரவல்ல இருவினையைக் கடந்தவரே பரமனையே பாடுவாரெனச் சுருதிகூறியதற்கு இலக்கியமாக, கடவுளுடைய கீர்த்தியை விரும்பினவரிடத்து நல்வினை தீவினையாகிய இரண்டு மணுகா தென்று நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், ஈசனைப் போற்றுவார்க் கெவ்வினையு மில்லை யென்றறிக. (௭௭)

### சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்.

அத்தனடி யல்லா லறம்பொருளின் பங்களிலே
சித்தமலை யார்சித்தத் தைச்சிவன்பால்—வைத்தார்தாம்
பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(இ-ள்) அறம் பொருளின்பங்களிலாசை வைத்துப் புறம் போவதே சுபாவமான புலன்களை மடக்கிப் பிராணவாயுவை யடக்கி மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினையென்

னும் ஆறு தாரங்களிலும் முறையே கணேசர், பிரமா, விஷ்ணு, ருத்திரன், மகேசன், சதாசிவனென்னும் ஆறு மூர்த்திகளைத் தியானித்துச்சித்த யேகாக்கிரத்துடன் சர்வதோமுகமாய் ஸ்வயம்பிரகாசமாயிருக்கின்ற பரிபூரணப் பிரகாசமாகிய பரமசிவ பாதாம்புயங்களிற் பாயும் ஞானமிர்தத்தைப் பருகிக் கொண்டிருப்பவர்களே சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர்களெனக் கூறியிருப்பதற்கியைய, பற்றை நீக்க விரும்புவோர் எல்லாப் பொருளையும் பற்றி நின்றும் பற்றில்லாத பரமசிவனாற் கூறப்பட்ட முத்திவழியைப் பற்றவேண்டுமென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், பற்றற்றார்க்கே பரமவின்பம் சித்திக்கு மென்றறிக. (௭௭).

## திருவாரூர்ப் பிறந்தார்.

மன்னுதிரு வாரூர் மதில்வட்டத் துப்பிறந்தா
ருன்னு சிவகணத்தி னுற்றுயர்ந்தா—ரின்னே
நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(இ-ள்) ஊழி காலத்தும் நிலை பெற்ற ஒப்புவமை யில்லாத திருவாரூரென்னும் சிவக்ஷேத்திரத்தி னெல்லைக்குட் பூர்வபுண்ணியபுஞ்சபரிபாகத்தாற் செனித்த எந்தச் சாதியாரும், சிவகணங்கள் தாமென்பதைப் பரமசிவ மாக்ஞாபித்த பிரகாரம் நமிநந்தியடிகளுயைனாரும் பிரத்தியட்சமாய்க் கண்டு தெரிசித்துச் சந்தேகந்தெளிந்த சரிதைக் கியைய, நிலத்தி னியல்பை யதனிடத்தே முளைத்த முளை காட்டும் குலத்தினியல்பை மனிதர்வாக்கினா லறியலா மென்று நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், ஸ்தான மகிமையாற் சகல நன்மையுமடையப்படு மென்றறிக. (௭௮).

## முப்போதுந் திருமேனி தீண்டுவார்.

கருமேனி யன்பாற் கழீஇமுப் போதுந்
திருமேனி தீண்டுவார் சீர்வாழ்—வொருவா
பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(இ-ள்) அநாதி சதாசிவ மூர்த்தியுடைய சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசான மென்னும் பஞ்சமுகத்தினின்றும் தோன்றிய கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகஸ்திய ரென்னும் பஞ்சருஷி கோத்திரத்திலே யவதரித்த சிவப் பிராமணர்களாகிய ஆதிசைவர் சமய விசேட நிருவாண தீக்ஷை ஆசாரியாபிஷேகம் பெற்றுக்

கருப்பசம்பந்தமான காயமாதி சத்தியுடையராய்க் கடவுளுடைய காரு
ண்ய வடிவமான மூர்த்திகளைச் சதா காலமுந் தீண்டியபிஷேகாலங்காரம்
அருச்சனை நைவேத்தியம் செய்பவர்களே முப்போதுந்திருமேனி தீண்டு
வாரெனப் புராணங் கூறுவதற்கேற்ப, கடவுள் வழிபாடு செய்து கொண்டு
ஒழுக்கம் தவறாதிருப்பவர் நீடூழி வாழ்வாரென நாயனாருங் கூறியுள்ளாராத
லின், சமரச சன்மார்க்க நெறிதவறா தொழுகுதலே சாதுக்கள் கடமை
யென்றறிக. (௮௦)

## முழுநீறு பூசியமுனிவர்.

அழுதீசனைநினைந்தே யஞ்சுபதஞ் சொல்லி
முழுநீ றணிவார்தா முட்டார்—பழுதறினும்
ஒல்லும் வகையா லறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

(இ-ள்) அனாதியவித்தையிற் கட்டுண்டிருந்த ஆன்மாக்களை யடியிணை
யிற் சேர்க்கும் பொருட்டுத் தன்காருணியத்தால் தனு கரண புவன போக
ங்களைத் தந்து ரட்சிக்கும் சாட்குண்ய சம்பன்னரான சாம்பசிவ மூர்த்தி
யை நினைக்குந் தோறும் நெக்கு நெக்குருகி யானந்த பாஷ்பம் சொரிந்து,
அவர் தருமைத் திருமந்திரமாகிய பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்து, உற்பத்
தியிலேயே கற்பம், அநுகற்பம் உபகற்ப மென மூவகைப்படும் விபூதியை
யாயினும் நித்தியாக்கினியி லெடுத்த பஸ்பத்தை யாயினும் விதிப்படி
தரிப்பவரே எவ்விதப் பிரதிபந்தங்களையும் இலேசாய்க் கடந்தீசனடிக்காளா
கத்தக்க முழு நீறு பூசிய முனிவரெனப்படும் மூதுரைக் கிணங்க, தத்தமக்
குரிய தருமமாகிய நல்வினைகளைச் செல்லுமிடங்களி லெல்லாஞ் செய்
யக்கடவரென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், இயன்ற வோர்
தவஞ் செய்து ஈசனை வழிபடுவோர் எளிதி லின்பமடைவ ரென்றறிக.

## அப்பாலுமடிச்சார்ந்தார்.

பாடுமுனைப் பாடியர்கோன் பாடலின்மெய்ப் பாடகங்கொண்
டாடுவரப் பாலு மடிச்சார்ந்தார்—நீடரன்பாற்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(இ-ள்) சேர சோழ பாண்டியரென்னு மூவேந்தருக்கு முரிய
தமிழ் நாட்டுக் கப்புறத்திலே பரமசிவனுடைய திருவடிகளை யடைந்தவரும்
ஸ்ரீசுந்தரர்முதலியோர் தேவாரப்பாடல்களினுள்ளன்பை யுணர்ந்துருகியாடு

ப்பாடி யரனடி யப்பாலடைந் துள்ளவர்களுமாகிய பக்தர்கள் அப்பாலு மடிச் சார்ந்தாரெனப்படு மனுபவத்திற் கேற்ப, ஞானாசாரியரிடத்தே உபதேசங் கேட்டு மெய்யுணர்ந்த அடியார்களே மீண்டும் பிறவாதவரென்று திருவள்ளுவரும் திருவாய் மலர்ந்துள்ளா ராதலின், மெய்ப் பொருளுணர்ந்தார்க்கே மீண்டும் பிறப்பில்லை யென்றறிக. (௪உ)

## சுந்தரமூர்த்தி நாயனார்

பித்தரென வைதாற் பிழைபொறுத்தன் மாத்திரமோ
வத்தரா ரூரர்க் கருள்புரிந்தார்—நித்தம்
அழிவந்த செய்யினு மன்பரு ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(இ-ள்) அனைத்துயிர்க்குயிராய் நின்றூட்டியடக்கும் அண்ணலார் ஆலால சுந்தரரை யாட்கொள்ளும் பொருட்டு அந்தணர் வடிவம் பூண்டு, அடிமை யோலை காட்டவந்த போது, அடிகள் பித்தனே யென்றுரைத்த பெரும் பிழையை மன்னித்தது மாத்திரமோ? அருட்டுறை யாலயத்தழைத்துச் சென்று அப்பா! நீ எப்போதும் நந்தோழனென வாட்கொண்டு நித்தியாநந்த வாழ்வை யளித்த வற்புத சரிதைக் கியைய, பழமையாயுள்ள நண்பரடாதவை செய்யினுமவர் யாட் டப்பிரியங்காட்டா ரென முதற்பாவலரும் மொழிந்தனராதலின், அன்பர் பழிப்புரையும் அருமையாய்த் தோற்று மென்றறிக. (௪௩)

## பூசலார் நாயனார்.

வானமுதற் றாவி வரைமனத்தே கட்டியரன்
றானமாப் பூசலார் தாபித்தார்—ஞான
மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(இ-ள்) திருநின்ற வூரிலே யவதரித்த பூசலார் நாயனார் சிவனடியார்க்கே தொண்டுசெய்யுந் திறத்தைப் பெற்றதோடு சிவபிரானுக்கோராலயங் கட்டவேண்டு மென்றாசை மேலிட அதற்காக வேண்டும் பொருள் சம்பாதிக்க முயன்று சிறிதுங் கைகூடாமைபற்றி மனந்தளராமல் மனக்கோயில் கட்ட ஆரம்பித் திரவும்பகலும் நித்திரையின்றி நெடுநாளாகக்கூடக்கோயில்கட்டி முடித்துக் கும்பாபிஷேகத்துக்கோர் சுபதினம் பார்த்துக் கொண்டிருக்கையில் காஞ்சிபுரத்திற்காடவராஜன் ஓராலயங்கட்டிப் பிரதிட்டைக்கு குறித்ததினத்திற்குமுன்னிரவிற் சிவ

பெருமான் இராஜனது சொப்பனத்தே தோன்றி நாம் நாளைப்பூசலார் கட்டியிருக்கு மாலயத்திற்குச் செல்வோம். நீவேறுதினம் வைத்துக்கொள்ளென்றாக்ஞாபித்தவருடைய அன்பையுலகிற்குக்காட்டியபடியே நாயனாரும் அரசனால் நிகழ்ந்தவையறிந்து அன்புமேலிட்டத்தினத்திற் பிரதிட்டை முடித்துப் பேரானந்த வாழ்வையடைந்தன ரென்னும்அற்புத சரிதைக் கியைய, அன்பரது நெஞ்சமென்னு மலர்மிசை வசிப்பவனது பாதங்களை யடைந்தவர் மோக்ஷவீட்டிற்சுகமாய்வாழ்வரென முப்பானூலின் மொழிந்தனராதலின், புறத்தொண்டினும் அகத்தொண்டருமை யென்றறிக. (௮௪)

## மங்கையர்க் கரசியார்.

ஞானசம் பந்தரங்கே நண்ணியபி னெண்ணிலா
தானிவிளைத் தாளே யமணர்க்கு—மானியார்
கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

(இ—ள்) மாறன்மனைவியாராகிய மங்கையர்க்கரசியார் மதுராபுரியை வளைந்திருந்த சமணிருணீங்குஞ் சமயம்பார்த்திருந்து தமிழ்ஞானக்குரிசிலாகியசம்பந்தப்பிள்ளையாரையழைப்பித்து வாதுகூறித்தோற்ற சமணரெண்ணாயிரவரையுங் கழுவேற்றிக் காசினியெங்குஞ் சைவநெறி தழைத்தோங்கச்செய்து தன்கணவரடைந்த பேற்றைத் தாமுமடைந்த சரிதைக்கிலக்கியமாக, சமையம்பார்த்திருந்து கொக்குத்தப்பாது தன்னிரையைக்கவர்தல்போலச்சத்துருக்களைச் செயிக்குங் காலமறிந்து செயங் கொள்ளக்கடவதெனத் திருவள்ளுவ நாயனாருஞ் செப்பியிருக்கின்றாராதலின், காலங்கருதிச் செய்வார்க்கே காரியங் கைகூடு மென்றறிக. (௮௫)

## நேச நாயனார்.

ஈசருடை மெய்யடியார்க் கேதேனுஞ் செய்வனென்று
நேசருடை கோவணங்கீ ணெய்தளித்தா—ராசைபுரிந்
தன்றறிவா மென்ன தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

(இ—ள்) காம்பீலிகா நகரத்திலே சாலியர் குலத்துக்குத் தலைவராகிய நேசநாயனார் தம்மனத்தின் செய்கையை மகாதேவரது திருவடிக்காக்கி வாக்கின் செய்கையை ஸ்ரீபஞ்சாக்ஷர செபத்திற் காக்கிக் காயத்தாற் கடவுளடியார்க் கியன்ற பணிசெய்யக் கருதி வஸ்திரமுங் கீளுங் கோவணமும் நெய்து சிவனடியார்க்குச் சிரத்தையுடன் கொடுத்து வணங்கி யுபசரித்து

வந்த விசேடத்தாற் பரமசிவ பாத பத்மங்களை யடைந்த திவ்விய சரி தைக் கேற்ப; இறக்கும் போது தருமஞ்செய்வோ மென்றுது தினஞ் செய்க, அவ்வறமிறக்கும்போதுதவியா மெனப்பொதுமறையிற் புகன் றிருத்தலின், தர்மத்தைத் தாமதியாது செய்வதுசித மென்றறிக. (அ௬)

## கோச்செங்கட் சோழ நாயனார்.

மூந்திகலாற் செங்கணான் மூண்டானைக் காவினும்பின்
றந்திபுகா வாயில் சமைத்தானே—யெந்தைக்
குடப்பா டிலாதவர்வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டடனுறைந் தற்று.

(இ-ள்) புண்ணிய முதிர்ச்சியாற் பூர்வ சென்மவுணர்ச்சி யோடு பூமிக்கதிபதியா யவதரித்த கோச்செங்கட்சோழ நாயனார் தாம் திருவானைக் காவில் வெண்ணாவல் விருட்சத்தின் கீழ் வீற்றிருக்கும் சிவலிங்கப்பெருமானுக்குச் செய்த பணிவிடைக் கிடையூறு செய்த யானையின் மேல் வைரத்தோ டுயிர்நீங்கினதி னலே மறு சென்மத்தில் அவ்வாலயத்துள் கோயில் கொண்டிருக்குஞ் சிவலிங்கப் பெருமானுக்குச் சமீபத்திலும் யானை புகாவண்ணம் பலகணி வாசலமைத்துப் பணிசெய்த சரிதைக் கியைய, மனப்பொருத்த மில்லாதவருடன் வாழ்தலானது ஒரு குடிசைக்குட் சர்ப்பத்துடன் வசிப்பதற்குச் சமானமெனத் திருவள்ளுவ நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், மனத்துவேஷம் மறுபிறவிக் கேது வென்றறிக. ()

## இதுவுமது.

சிலம்பியாய் நூற்கோயில் செய்தசெங்க ணன்பின்
றலங்கடொறுங் கோயில் சமைத்தார்—நலங்கூர்
தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(இ-ள்) சிலம்பிப் பூச்சியாயிருந்து திருவானைக்காச் செல்வர்மேற் சருகுதிராவண்ணம் வாய் நூலால் மேற் கட்டி செய்த புண்ணிய விசேடத்தால் சுபதேவரென்னுஞ் சோழ மகாராஜா புத்திரரா யவதரித்த கோச் செங்கட் சோழ நாயனார் அளவற்ற சிவாலயம் பிரமாலயங்களை யமைத்து, எங்கணுஞ் சைவநெறி தழைத்தோங்க அரசாண்டு சிவபத மடைந்தன ரென்னுஞ் சரிதைக்கியைய, தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்பவரென்றும், மற்றைப் பொருளின்பங்களைக் கருதுவோர் ஆசைக்

குட்பட்டுக் கேடு செய்பவ ரென்றும் நாயனார் கூறியிருக்கின்றாராதலின் தவமிலார் முயற்சி யவமா மென்றறிக. (௮௮)

## திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்.

காணத் திருநீல கண்டயாழ்ப் பாணரைப்போன்
ஞானத் தலைவர்க்கு நட்பினரார்—மானத்து
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

(இ-ள்) இசைபாடுந் திறத்தி லெவரையு மொப்பிடத்தகாதவரும் ஓர் காலத்திற் றிருவாலவாய்க்குச் சென்று ஸ்ரீசுந்தரேசர் சந்நிதியில் யாழ் வாசிக்கும் பொழுது, இசைக்கு ஆடும் பெருமானாகிய வெம்மையன் மகிழ்ந்து புலவருக்குப் பொற்பலகை யிடும்படி யசரீரிவாக்களிக்கப் பெற்ற திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் ஞான மதயானையாகிய சம்பந்தப் பிள்ளையாரை வழிபட்டு, அம்மூர்த்திகளா லருளிச் செய்யப்பட்டவற்புதத்தேவாரங்களை யாழிலிட்டு வாசிக்கு மருமைத் திருத் தொண்டின் மேம்பாட்டால், அத்தியந்த ஆப்தராய், அவருடன் சஞ்சரித்துத் திருநல்லூர்ப் பெருமணத்திலவருடன் சிவபத மடைந்த திவ்விய சரிதைக் கேற்ப, மேற்குலத்திற் பிறந்த கல்லாதவர் கீழ்க் குலத்திற் பிறந்த கற்றவரினுங் கீழென நாயனாருங் கூறி யிருக்கின்றாராதலின், சாதியுயர்வினுந் தக்கல்வியறிவே யுயர் வென்றறிக. (௮௯)

## சடைய நாயனார்.

ஆம்பற்றி னாற்சடைய ராலால சுந்தரரைத்
தாம்பெற்ற பேறே தவப்பேறே—யோம்பிப்
பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

(இ-ள்) திருமுனைப்பாடி நாட்டிலே யுள்ள திருநாவலூரின்கண் ஆதிசைவ குலதிலகராகிய சடைய நாயனார் அனேக ஜென்மங்களில் அருந்தவம் புரிந்த பக்தி விசேடத்தால் உலக மெல்லா மெய்ஞ்ஞான வொளியைப் பெற்றுய்யும்படி சைவசமயாசாரியாராகிய சுந்தரரைப் புத்திரராகப் பெறும் பெரும் பேற்றைப் பெற்றனர்; இதற்கிலக்கியமாக நாயனாரும் பிரமஞானத்தை யடைதற்குரிய பிள்ளைப் பேற்றுக்கு மேற்பட்ட பெரும் பிரயோசனம் வேறின்றெனக் கூறியிருக்கின்றாராதலின், நன்மக்கட்பேற்றாலே பெற்றோர் பெருமை யடைவ ரென்றறிக. (௯௦)

## இசை ஞானியார்.

உற்றவிசை ஞானிதா னோங்குபுகழ்ச்சுந்தரரைப்
பெற்றதினு மன்புமிகப் பெற்றாளே—முற்றறிவா
லீன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

(இ-ள்) சடைய நாயனாருடைய மனைவியாராகிய இசைஞானியார் ஒப்பற்ற கீர்த்தியுடன் விளங்கிய சுந்தர மூர்த்தி சுவாமிகளைப் பெற்ற பொழுதுண்டாகிய சந்தோஷத்திலும், அம்மூர்த்திகள், அரனருள் பெற்றுலக மெங்குஞ் சைவசமய வுத்தாரணார்த்தஞ் சஞ்சரித்த பொழுது பல மகிமைகள் விளங்கியதைக் கேட்ட காலங்களிற் கரைகடந்த களிப்புமேற்பட்டவளாய்ப் பேரானந்தக் கடலாகிய சிவபத மடைந்த திவ்விய சரிதத்திற் கேற்ப, தாயானவள் குழந்தையைப் பெற்ற சமய மகிழ்ச்சியைக் காட்டிலும் பிள்ளையின் புகழ்களைக் கேட்ட பொழுது பேரானந்த மடைவளெனப் பெருநாவலருங் கூறியிருக்கின்றாராதலின், மக்கள் புகழ்ச்சி மாதாவுக்கு மகிழ்ச்சியைத் தருமென்றறிக. (௬௧)

## சுந்தர மூர்த்தி நாயனார்.

அனிந்திதையங் கண்டார் கமலினியுங் காவி
லனிந்திதையுஞ் சுந்தரர்கண் டாங்கே—புனைந்துரைத்தென்
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனுமில.

(இ-ள்) ஸ்ரீகைலாச கிரியின் கண்ணே பார்வதிதேவியின் சேடியராகிய கமலினி, அநிந்திதை யென்னு மிரண்டு கன்னிகைகளும், பூந்தோட்டத்திற் புஷ்பங் கொய்ய வந்திருந்த தருணத்தில், ஆங்கதே பணிவிடைக்குச் சென்ற ஆலால சுந்தரர் அவ்விருவர் மேல் மோகமுண்டாய்ப்பார்த்த சமயத்தில் அவர்களுங் கண்ணோக்கியதை யறிந்த ஸ்ரீபரமசிவமானவர் அம்மூவரையும் பூலோகத்திற் செனிக்கும் படி யாக்ஞாபித்த வற்புத சரிதைக் கியைய, தலைவன் தலைவி யிருவர்க்கும் பட்சமுடைய பார்வை யொத்தாயின் வாய்ச் சொற்களாற் பிரயோசனமியாது மின்றென நாயனாருங் கூறியுள்ளாராதலின், மாதர் மயக்கம் மகிமையைக் கெடுக்குமென்றறிக. (௬௨)

## இதுவுமது.

சுந்தரரைக் கண்டலர்கொய் தோகையர்சென் றொருங்கு
லொருங்குதகயிலைக்கிறையா லின்றளவும்—வந்ததே

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

(இ-ள்) ஸ்ரீகைலாசத்தின் கண்ணே சுந்தரரும் புஷ்பங் கொய்யச் சென்றிருந்த கன்னியரிருவருங் கண்டு மோகமுற்றதொரு நாள் அதை யறிந்த ஸ்ரீபரமசிவமானவர் தன்னால் நியமிக்கப்பட்ட வேத ஆகம விரோதச் செய்கையாதலாற் றேழராகிய சுந்தரரையுங் கன்னிகைகளையும் பாழுலகில் அவதரிக்கும்படி விதித்தபழியென்று நின்றதற் கேற்ப, பழிப்பான விஷயங்களைப் பார்ப்பதொரு நாளேனும் பழிச்சொல் சந்திரனைப் பாம்பு தீண்டியது போற் பலகாலும் நிற்குமென நாயனாரும் நவின்றுள்ளாராதலின், பழிச் சொல்வாராவண்ணம் பாதுகாத்தலவசியமென்றறிக. ()

இதுவுமது.

அங்கருளா லாரூ ராசையற வேபரவை
சங்கிலியார் மாநோய் தவிர்ப்பித்தா—னெங்கோன்
பிணிக்கு மருந்து பிறம ணணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

(இ-ள்) ஆலால சுந்தரமூர்த்திக்கும், சேடியராகிய கமலினி, அநிந்திதைக்குங் கண்ணோக்கிய மாத்திரத்திற் கைலாச கிரியின்கணுற்ற காம நோயானது பரமசிவாக்ஞைப்படி பாரில் வந்து சுந்தரராகவும், பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியாராகவு மவதரித்து, அருள் முன்னின்று கூட்டி வைக்க விதிப்படி விவாகஞ் செய்துகொண்டனுபவிக்க நேர்ந்ததற் கேற்ப, பிணிக்கு மருந்து பிறவுள. பெண்ணாசையாகிற பிணிக்கவர்தாமே மருந்தென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், பெண்களைப் பார்த்தாலும் பீடிக்குமென வறிந்தொழிக. (கூசு)

இதுவுமது.

சீரூர் கயிலையினுஞ் செல்லுநாள் வில்லவனை
யாரூரர் சிந்தித் தழைத்திட்டா—ரோரார்
முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

(இ-ள்) சிறப்புற்றோங்கிய கைலாச கிரிக்குக் கடவுளாக்ஞைப்படி தேவர்கள் திருவஞ்சைக் களத்துக்கு வந்து ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை வெள்ளையானையின் மீதாரோகணிக்கச் செய்து அஷ்டவித வாத்திய

கோஷத் தோடழைத்துச் செல்லும்போது சினேகிதரான சேரமான் பெருமாணயனாரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிந்தித்ததை யறிந்தவவருங் குதிரை மீதேறிக்கூடச் சென்றன ரென்னுந் திவ்விய சரிதைக்கேற்ப, முகமலர்ந்து சினேகிப்பது சினேகமல்ல, அகமலர்ந்த நட்பே சிரேஷ்டமென்பதாக முப்பாவலரு மொழிந்துள்ளாராதலின், அகநட்பே அன்பைப் பெருக்கு மென்றறிக. (கரு

இதுவுமது.

தள்ளாது சேரரொடு தாங்கயிலைக் காரூரர்
வெள்ளானை மேற்சென்றார் விண்ணாறு—முள்ளமிசை
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(இ-ள்) சுந்தரமூர்த்தி நாயனார் திருவஞ்சைக் களத்தி லாலயத்திற்குச் சென்று சிவபெருமான் சந்நிதியில் நின்று திருவடி சேர்க்கவேண்டுமென்று சிந்தித்தவுடனே திருவருளாக்ஞைப்படி வந்த வெள்ளானை மீது தாமும், நீக்கற் கரிய நேசராகிய சேரமான் பெருமாள் அசுவமீதும் ஏறி ஆகாயமார்க்கமாய்ச் சென்று கைலாசத்தை யடைந்த சரிதத்திற்கிணைய, நாயனாரும், இம்மையிற்றவஞ்செய்தவர்க்கே மறுமையில் மனத்திலினைத்த வெல்லாங் கைகூடுமென்று கூறி யிருக்கின்றாராதலின், சகலமுந் தவத்தினாலடையப் படுமென்றறிக. (கசு)

இதுவுமது.

நாவலர்வெள் ளானை நடாத்தவுப மன்னியர்பேர
லாவலுடன் சென்றுபணிந் தார்களே—தேவர்
பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

(இ-ள்) ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகள் வெள்ளானை மீது திருக்கைலாசத்திற்குச் செல்லுகிறாரென்பதை ஞானதிட்டியாலுடனே யறிந்த உபமன்னிய மகா முனிவரானவர் அன்பென்னுமாறிழுக்கச் சென்று தெரிசித் தானந்தித்தது போலத் தேவர் முதலிய யார்தாம் கண்டு களித்தன ரென்னுஞ் சரிதத்திற் கேற்ப, திருவள்ளுவரும்; அறிவுடையோர் சிறப்புண்டாகிய காலத்து மடங்கி நடப்பர். அறிவில்லார் சிறப்பில்லாத காலத்துஞ் சிறப்பித்து நடப்பரெனக் கூறியிருக்கின்றாராதலின், பெருமையுடையோர் தம்மைக் கீழ்ப்படுத்திக் கொள்வரென்றறிக. (கஎ)

குட்பட்டுக் கேடு செய்பவ ரென்றும் நாயனார் கூறியிருக்கின்றாராதலின் (அசு)
தவமிலார் முயற்சி யவமா மென்றறிக.

## திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்.

காணத் திருநீல கண்டயாழ்ப் பாணரைப்போன்
ஞானத் தலைவர்க்கு நட்பினரார்—மானத்து
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

(இ-ள்) இசைபாடுந் திறத்தி லெவரையு மொப்பிடத்தகாதவரும்
ஓர் காலத்திற் றிருவாலவாய்க்குச் சென்று ஸ்ரீசுந்தரேசர் சந்நிதியில்
யாழ் வாசிக்கும் பொழுது, இசைக்கு ஆடும் பெருமானாகிய வெம்மையன்
மகிழ்ந்து புலவருக்குப் பொற்பலகை யிடும்படி யசரீரிவாக்களிக்கப்
பெற்ற திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் ஞான மதயானையாகிய சம்
பந்தப் பிள்ளையாரை வழிபட்டு, அம்மூர்த்திகளா லருளிச் செய்யப்பட்டவற்
புதத்தேவாரங்களை யாழிலிட்டு வாசிக்கு மருமைத் திருத் தொண்டின்
மேம்பாட்டால், அத்தியந்த ஆப்தராய், அவருடன் சஞ்சரித்துத் திரு
நல்லூர்ப் பெருமணத்திலவருடன் சிவபத மடைந்த திவ்விய சரிதைக்
கேற்ப, மேற்குலத்திற் பிறந்த கல்லாதவர் கீழ்க் குலத்திற் பிறந்த கற்
றவரினுங் கீழெனா நாயனாருங் கூறி யிருக்கின்றாராதலின், சாதியுயர் (அக)
விலுந் தக்ககல்வியறிவே யுயர் வென்றறிக.

## சடைய நாயனார்.

ஆம்பற்றி னாற்சடைய ராலால சுந்தரரைத்
தாம்பெற்ற பேறே தவப்பேறே—யோம்பிப்
பேறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

(இ-ள்) திருமுனைப்பாடி நாட்டிலே யுள்ள திருநாவலூரின்கண்
ஆதிசைவ குலதிலகராகிய சடைய நாயனார் அனேக ஜென்மங்களில் அருந்
தவம் புரிந்த பக்தி விசேடத்தால் உலக மெல்லா மெய்ஞ்ஞான வொளி
யைப் பெற்றுய்யும்படி சைவசமயாசாரியாராகிய சுந்தரரைப் புத்திரராகப்
பெறும் பெரும் பேற்றைப் பெற்றனர்; இதற்கிலக்கியமாக நாயனாரும் பிரம
ஞானத்தை யடைதற்குரிய பிள்ளைப் பேற்றுக்கு மேற்பட்ட பெரும் பிர
யோசனம் வேறின்றெனக் கூறியிருக்கின்றாராதலின், நன்மக்கட்பேறுடை (கூ0)
பெற்றார் பெருமை யடைவ ரென்றறிக.

## இசை ஞானியார்.

உற்றவிசை ஞானிதா னோங்குபுகழ்ச்சுந்தரரைப்
பெற்றதினு மன்புமிகப் பெற்றாளே—முற்றறிவா
லீன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

(இ-ள்). சடைய நாயனாருடைய மனைவியாராகிய இசைஞானியார் ஒப்பற்ற கீர்த்தியுடன் விளங்கிய சுந்தர மூர்த்தி சுவாமிகளைப் பெற்ற பொழுதுண்டாகிய சந்தோஷத்திலும், அம்மூர்த்திகள், அரனருள் பெற் றுலக மெங்குஞ் சைவசமய வுத்தாரணார்த்தஞ் சஞ்சரித்த பொழுது பல மகிமைகள் விளங்கியதைக் கேட்ட காலங்களிற் கரைகடந்த களிப்பு மேற்பட்டவளாய்ப் பேரானந்தக் கடலாகிய சிவபத மடைந்த திவ்விய சரிதத்திற் கேற்ப, தாயானவள் குழந்தையைப் பெற்ற சமய மகிழ்ச்சியைக் காட்டிலும் பிள்ளையின் புகழ்களைக் கேட்ட பொழுது பேரானந்த மடைவ ளெனப் பெருநாவலருங் கூறியிருக்கின்றாராதலின், மக்கள் புகழ்ச்சி மாதா வுக்கு மகிழ்ச்சியைத் தருமென்றறிக. (௬௧)

## சுந்தர மூர்த்தி நாயனார்.

கனிந்திதையங் கண்டார் கமலினியுங் காவி
லனிந்திதையுஞ் சுந்தரர்கண் டாங்கே—புனைந்துரைத்தென்
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனுமில.

(இ-ள்) ஸ்ரீகைலாச கிரியின் கண்ணே பார்வதிதேவியின் சேடிய ராகிய கமலினி, அநிந்திதை யென்னு மிரண்டு கன்னிகைகளும், பூந் தோட்டத்திற் புஷ்பங் கொய்ய வந்திருந்த தருணத்தில், ஆங்கதே பணி விடைக்குச் சென்ற ஆலால சுந்தரர் அவ்விருவர் மேல் மோகமுண்டாய்ப் பார்த்த சமயத்தில் அவர்களுங் கண்ணோக்கியதை யறிந்த ஸ்ரீபரமசிவமான வர் அம்மூவரையும் பூலோகத்திற் செனிக்கும் படி யாக்ஞாபித்த வற்புத சரிதைக் கியைய, தலைவன் தலைவி யிருவர்க்கும் பட்சமுடைய பார்வை யொத்ததாயின் வாய்ச் சொற்களாற் பிரயோசனமியாது மின்றென நாயனாருங் கூறியுள்ளாராதலின், மாதர் மயக்கம் மகிமையைக் கெடுக்கு மென்றறிக. (௬௨)

## இதுவுமது.

சுந்தரரைக் கண்டலர்கொய் தோகையர்சென் றொருங்கு
வெந்தைதகைய் லைக்கிறையா வின்றளவும்—வந்ததே

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

(இ-ள்) ஸ்ரீகைலாசத்தின் கண்ணே சுந்தரரும் புஷ்பங் கொய்யச் சென்றிருந்த கன்னியரிருவருங் கண்டு மோகமுற்றதொரு நாள் அதை யறிந்த ஸ்ரீபரமசிவமானவர் தன்னால் நியமிக்கப்பட்ட வேத ஆகம விரோதச் செய்கையாதலாற் றோழராகிய சுந்தரரையுங் கன்னிகைகளையும் பாழுலகில் அவதரிக்கும்படி விதித்தபழி யென்று நின்றதற் கேற்ப, பழிப் பான விஷயங்களைப் பார்ப்பதொரு நாளேனும் பழிச்சொல் சந்திரனைப் பாம்பு தீண்டியது போற் பலகாலும் நிற்கு மென நாயனாரும் நவின்றுள்ளா ராதலின், பழிச் சொல்வாராவண்ணம் பாதுகாத்தலவசிய மென்றறிக. ()

இதுவுமது.

அங்கருளா லாரூர ராசையுற வேபரவை
சங்கிலியார் மாதேனைத் தவிர்ப்பித்தா—னெங்கோன்
பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

(இ-ள்) ஆலால சுந்தரமூர்த்திக்கும், சேடியராகிய கமலினி, அனிந் திதைக்குங் கண்ணோக்கிய மாத்திரத்திற் கைலாச கிரியின்கணுற்ற காம நோயானது பரமசிவாக்ஞைப்படி பாரில் வந்து சுந்தரராகவும், பரவை நாச்சி யார், சங்கிலி நாச்சியாராகவு மவதரித்து, அருள் முன்னின்று கூட்டி வைக்க விதிப்படி விவாகஞ் செய்துகொண்டனுபவிக்க நேர்ந்ததற் கேற்ப, பிணிக்கு மருந்து பிறவுள. பெண்ணாசையாகிற பிணிக்கவர்தாமே மருந் தென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், பெண்களைப் பார்த்தாலும் பீடிக்கு மென வறிந்தொழிக. (௯௪)

இதுவுமது.

சீரூர் கயிலையினுஞ் செல்லுநாள் வில்லவனை
யாரூரர் சிந்தித் தழைத்திட்டா— ரோராா்
முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

(இ-ள்) சிறப்புற்றோங்கிய கைலாச கிரிக்குக் கடவுளாக்ஞைப்படி தேவர்கள் திருவஞ்சைக் களத்துக்கு வந்து ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை வெள்ளையானையின் மீதாரோகணிக்கச் செய்து அஷ்டவித வாத்திய

கோஷத் தோடழைத்துச் செல்லும்போது சினேகிதரான சேரமான் பெருமாணுயனுரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிந்தித்ததை யறிந்தவவருங் குதிரை மீதேறிக்கூடச் சென்றன ரென்னுந் திவ்விய சரிதைக்கேற்ப, முகமலர்ந்து சினேகிப்பது சினேகமல்ல, அகமலர்ந்த நட்பே சிரேஷ்டமென்பதாக முப்பாவலரு மொழிந்துள்ளாராதலின், அகநட்பே அன்பைப் பெருக்கு மென்றறிக. (கரு

## இதுவுமது.

தள்ளாது சேரரோடு தாங்கயிலைக் காரூரர்
வெள்ளானை மேற்சென்றார் விண்ணூறு—புள்ளமிசை
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(இ-ள்) சுந்தரமூர்த்தி நாயனர் திருவஞ்சைக் களத்தி லாலயத்திற்குச் சென்று சிவபெருமான் சந்நிதியில் நின்று திருவடி சேர்க்கவேண்டுமென்று சிந்தித்தவுடனே திருவருளாக்ஞைப்படி வந்த வெள்ளானை மீது தாமும், நீக்கற் கரிய நேசராகிய சேரமான் பெருமாள் அசுவமீதும் ஏறி ஆகாயமார்க்கமாய்ச் சென்று கைலாசத்தை யடைந்த சரிதத்திற்கிணையய, நாயனுரும், இம்மையிற்றவஞ்செய்தவர்க்கே மறுமையில் மனத்தினினைத்த வெல்லாங் கைகூடுமென்று கூறி யிருக்கின்றாராதலின், சகலமுந் தவத்தினலடையப் படுமென்றறிக. (கசு)

## இதுவுமது.

காவலர்வெள் ளானை நடாத்தவுப மன்னியர்போ
லாவலுடன் சென்றுபணிந் தார்களோ—தேவர்
பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

(இ-ள்) ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகள் வெள்ளானை மீது திருக்கைலாசத்திற்குச் செல்லுகிறாரென்பதை ஞானதிட்டியாலுடனே யறிந்த உபமன்னிய மகா முனிவரானவர் அன்பென்னுமாறிழுக்கச் சென்று தெரிசித் தானந்தித்தது போலத் தேவர் முதலிய யார்தாம் கண்டு களித்தனரென்னுஞ் சரிதத்திற் கேற்ப, திருவள்ளுவரும்; அறிவுடையோர் சிறப்புண்டாகிய காலத்து மடங்கி நடப்பர். அறிவில்லார் சிறப்பில்லாத காலத்துஞ் சிறப்பித்து நடப்பரெனக் கூறியிருக்கின்றாராதலின், பெருமையுடையோர் தம்மைக் கீழ்படுத்திக் கொள்வரென்றறிக. (கஎ)

## இதுவுமது.

பாலாழி யுண்ட பழமுனிசொன் ஞன்முனிவர்க்
காலால சுந்தரன்சொ லங்கினிதாய்—மேலாம்
பணிவுடைய னின்சொல ஞத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(இ-ள்) வியாக்ர பாதர் புத்திரராகியும் பாலியா வஸ்தையிற் பசிவந்தழுதபொழுது பரமசிவமே கருணையினுற் பாற்கடலை யழைப்பித்துத் தரவுண்டு பசிப்பிணியும் பவப்பிணியு மடங்கிய வுபமன்னியு பகவானுனவர் அருந்தவ முடையரான முனிசிரேஷ்டர்களுக்கு ஆலால சுந்தாருடைய அவதார வரலாற்றையும், அற்புதத்திருவிளையாடல்களையும் அழகிய திருவாக்காற் கூறினு ரென்பதற்கிணங்க, பெரியோரிடத்து வணக்கமு மின்சொல்லுமாகிய விரண்டுமே யொருவர்க்கழகிய வாபரண மென நாயனுருங் கூறியிருக்கின்றாராதலின், பணிவு மின்சொல்லும் பரம புருஷார்த்த மென்றறிக. (௬௮)

## இதுவுமது.

தம்முடைய தோழர்வரத் தம்முடைய தோழரையும்
வம்மினென வண்கயிலை வாழ்வித்தா—ரெம்மிறைவர்
நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.

(இ-ள்) நெடுங்காலம் ஸ்ரீகைலாசத்தை விட்டு நீங்கியிருந்த தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் அவர் தோழராகிய சேரமான் பெருமாளுயனுரும் வரக்கண்டு பரமசிவனுனவர் அவ்விருவர்களுக்குந் தெரிசனங் கொடுத்தவ்விருவரையுங் கைலாசத்திலேயே வாழ்ந்திருக்கும்படி பேரருள் செய்த பெருங் கருணைக் கேற்ப, சிநேகத்திற்குச் சிறப்பாவதியாதெனிற் கூடிய போதெல்லாஞ் சிநேகிதரைத் தாங்குந் திண்மை யெனத் தமிழ் வேதமும் விரித்துரைக்கின்றதாதலின், நல்லோர் நட்பால் நன்மையே விளையு மென்றறிக. (௬௯)

## இதுவுமது.

சொல்வைத்த சேரனுலாச் சொல்லக் கயிலையரன்
செல்வத் திருச்செவியிற் சேர்ந்ததே—மல்வைத்த
செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

(இ-ள்) சைவநெறிதழைத்தோங்கச் சேரதேயத்தை யாண்டு புகழ்பெற்ற சேரமான் பெருமாணாயனார் அன்பு மேலீட்டாற் றிருவருள் கொண்டு சிவபெருமான்மேற் பாடிய திருவுலாவைச் சீவர்களை யிரட்சிக்கும் பொருட்டப்போதைக்கப்போ தருட்டிருமேனி கொண் டருளுமருமைத் திருச்செவிகளிற் கேட்பித்தன ரென்னுங் கேடில்லாத வநுபவத்திற்கி யையச், செல்வத்து ளெல்லாஞ் சிறந்தது செவிச் செல்வமே யென நாயனாருங் கூறியிருக்கின்றாராதலின், செவிச் செல்வஞ் சிறந்ததென்றறிக. (௧௦௦)

திருத்தொண்டர் மாலை உரை
முற்றிற்று.

---

## இந்நூலியற்றியோர் பெயரும் மகிமையும் பயனும்.

—(*)—

பன்னு கலைக்குமர பாரதியா மாமுனிவன்
சொன்னதமிழ் மாலை துதிப்பதற்கு—பின்னுதலை
யாயிரநா வாயிரத்தோ னன்றி யெவர்கொலோ
மாயிருஞா லத்தின் மகிழ்ந்து.

அடியார் மகிமை யறுதினமு மெண்ணி
யடியார் பணியிங்கே யாற்றி—யடியார்பாற்
கேட்டுநூல் சிந்திக்கிற் கேடிலா மெய்யுணர்வால்
வீட்டுநெறி கூடும் விரைந்து.

இ. பொ. வெளிப்படை.

ஆகப்பாயிரமுள்பட கவிகள் ௧௦௭.

சிவகுருநாதன் றிருவடி வாழ்க.

திருத்தொண்டர்பாதமேகதி.

